


ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 31

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| 3 ஸம் | கரஹூ சித்திரைமீ (ஏப்ரல்மீ 51) | 7 இதழ் |
|---|---|---|


## ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானர் ஸன்னிதியில்

## திருவவதாரமண்டப மஹா ஸம்ப்ரோக்ஷணம்

ஸ்ரீபெரும்பூதூரில் ஸன்னிதிக்கெதிரே நூற்றுக்கால் மண்டபத்தைச் சார்ந்த திருவவதார மண்டபத்தைப் பல வருஷங்களாக மிகச்சிறந்த திருப்பணிகளினல் பரிஷ்கரித்து வருகிற விஷயம் உலகமெல்லா மறிந்ததே. சென்னை அப்பா அண்டு கம்பெனித் தலைவரான ஸ்ரீமான் K. நாராயணப்ப நாயுடு அவர்கள் ஷை தேவஸ்தானத்தில் தர்மகர்த்ரு கைங்கரியம் பார்த்துவந்த காலத்தில் இத்திருப்பணி தொடங்கப்பெற்றது. அவருடைய தமையனர் குமாரரும், உலகப் பிரஸித்தரான K. வெங்கடஸாமி நாயுடு அவர்களின் தம்பியுமான ஸ்ரீமான் வெங்கடராமாநுஜலு நாயுடு வென்பவர் இப்போதைய தர்மகர்த்தாவாவர். இவர்களின் தீவிரமான விடா முயற்சியினல் இத்திருப்பணி வெகு பரிஷ்காரமாக முடிவுபெற்றுள்ளது. வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் ஆந்திர மாகாணங்களிலும் நைஜாம் பிராந்தங்களிலுமுள்ள பலபல பக்தர்களின் பொருளுதவியினல் இத்திருப்பணி மிகச் சிறப்பாகவே நடைபெற்றிருக்கின்றது. ஸ்வாமியின் திருவவதார பூமிக்கு இப்படிப்பட்ட சிறப்பு ஏற்படவேண்டியது மிகவும் அவசியமாதலால் அது செவ்வனே யேற்பட்டதுபற்றி உலகமெல்லாம் ஸந்தோஷிக்க ப்ராப்தமே.

மிகவும் ரமணீயமாக அமைந்துள்ள இத்திருமண்டபத்தில் அடிக்கடி ஸ்வாமி எழுந்தருளி மஹோத்ஸவங்கள் கண்டருள நேர்ந்தால் இத்திருப்பணி நிறைவேறுவதற்குப் பட்ட அபரிமிதமான பரிச்ரமங்கள் ஒருவாறு ஸபலமாகுமென்று பல பக்தர்கள் பேசிக்கொள்வது. ஏனெனில்; அந்நாள் தொடங்கி இந்நாள்வரையில் வருஷத்திலொரு நாளே ஸ்வாமி இம்மண்டபத்திலெழுந்தருள்வது. இனியும் அந்த ரீதியேயாகுமோ? என்கிற சங்கையினல்தான் இங்ஙனமெழுதப்பட்டது.

நாளது கரஹூ சித்திரைமீ 5உ புதன்கிழமை தொடங்கி மூன்று நாள் இம்மண்டப மஹாஸம்ப்ரோக்ஷணம் நடைபெற நிச்சயிக்கப்பட்டிருக்கின்றது. சித்திரைமீ 7உ வெள்ளிக்கிழமை ஹஸ்த நக்ஷத்திரம் கூடிய சுப தினத்தில் (20—4—51) காலை 9-30 மணிக்குமேல் 10-30 மணிக்குள் மிதுன லக்கினத்தில் ஸம்ப்ரோக்ஷணம் நடைபெறும். இதற்குப் பூர்வாங்க

மாக மூன்று நாள் உபய வேதபாராயணங்களும் இதிஹாஸபுராண படனங்களும் நூற்றுக் கணக்கான ஸ்வாமிகளைக்கொண்டு நடத்திவைக்கப்படும். மூன்று நாட்களிலும் பல வித்வான்களின் அரிய பெரிய சொற்பொழிவுகளும் ஹரிகதாகாலக்ஷேபங்களும் ஸங்கீத கச்சேரிகளும் நடைபெறும். ஸம்ப்ரோக்ஷணதினத்தன்று இரவு பெருமாள் கருடவாஹனத்திலும், ஸ்வாமி ஹம்ஸவாஹனத்திலும் திருவீதி புறப்பாடு கண்டருளி மஹோத்ஸவம் நடைபெறும்.

பக்தர்கள் ஆனந்தமாக அனுபவிப்பதற்கு வாய்த்த ஸமயமிது.



# ஓர் அறிக்கை.

ஸ்ரீஸ்வாமியின் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவ ஸம்பந்தமாக நினைவுமலர் ஒன்று ஹானரபள் Mr. ஜஸ்டிஸ் W. S. கிருஷ்ணஸ்வாமி நாயுடு அவர்களால் சேகரம் செய்யப்பட்டு அச்சிட்டு வெளியிடப்பட்டிருப்பது பலருமறிந்ததே. அதில் ஸ்ரீஸ்வாமியின் வைபவ ஸங்க்ரஹம் தமிழ் வசன நடையிலும் ஸம்ஸ்க்ருதத்தில் 220 ச்லோக ரூபமாகவும் வெளியிடப்பட்டிருப்பதுமல்லாமல் பல பெரியோர்களின் புகழுரைகள் ஆங்கிலத்திலும் தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் வெளியிடப்பட்டிருக்கின்றன. அதுவுமல்லாமல் 25 பெரியோர்களின் திருவுருவப் படங்களும் மிக அவசியமானவை பதிப்பிக்கப் பட்டிருக்கின்றன. 200 பக்கங்களுக்குமேலுள்ள இப்புத்தகத்தின் விலை 2—4—0 கிடைக்குமிடம் வி. ராதாகிருஷ்ணய்யா 147, அண்ணாபிள்ளைத் தெரு, ஜி. டி., மதராஸ்.

ஷை நினைவுமலரில் ஸ்வாமியின் பல வியாஸங்கள் சேர்க்கப்படவேணுமென்கிற ஆவல் இருந்தது. ஆனால் அவகாசக் குறைவினால் இரண்டு வியாஸங்கள் மாத்திரமே இம்மலரில் இடம்பெற்றன. இன்னுஞ் சில வியாஸங்களும் கைவசமுள்ளன. அவற்றுள் ஒரு வியாஸம் இப்பத்ரிகையின் முடிவில் சேர்க்கப்பட்டிருக்கின்றது. இப்படியே மாதந்தோறும் சேர்க்கப்படவேணுமென்று ஆவல்.

இப்படிக்கு,

**மானேஜர், ஸத். ஸபா.**

காஞ்சீபுரம - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்



விக்ருதிஸூ பங்குனித் திருவிசாகத்தன்று தேவப்பெருமாள் மங்களாசாஸனக் காட்சி (27-3-1951)

ஸ்ரீ:

### ஸ்ரீகாஞ்சியிலும் சென்னையிலும்

# P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவக் கொண்டாட்ட வைபவங்கள்.

(ஸ்வாமி ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவ நிர்வாஹ ஸபிகர்களில் ஒருவரான
நல்லப்பா ஜீயப்பங்கார், B.A.)

"காஞ்சீபுரம் மஹாவித்வான் பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஷஷ்டியப்த பூர்த்தி ஞாபகார்த்த நிதி" என்ற மகுடம் புனைந்த சிறுபுத்தகம் தெலுங்கு தமிழ் ஆங்கில லிபிகளில் ஆறு மாதங்களுக்கு முன்னமே வெளியிடப்பட்டிருந்ததும், அதையொட்டி ஹிண்டு, மித்திரன் முதலிய பல பத்திரிகைகளிலும் வெளிடப்பட்டிருந்ததும் நாடெங்கும் பரவியவையாதலால், இம்மஹோத்ஸவக் கொண்டாட்டத்தைப்பற்றிப் பூர்வாங்கமாக இங்கு நாம் தெரிவிக்கவேண்டியது யாதொன்றுமில்லை. உயர்திரு. ஜஸ்டிஸ். ஸ்ரீ. W. S. கிருஷ்ணஸ்வாமி நாயுடுகாரு (ஜட்ஜ் ஹைகோர்ட் மதராஸ்) அவர்களைத் தலைவராகக் கொண்டும், ஸர். எஸ். வரதாசாரியர் ஸ்வாமிகள், மதராஸ் ஹைகோர்ட் ஜட்ஜ ஸ்ரீ. P. ஸத்யநாராயணகாரு அவர்கள், ஸ்ரீ. V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகள், ஸர். K. S. கிருஷ்ணன் F. R. S. (டில்லி) அவர்கள், ஸ்ரீ. உ. வே. காரப்பங்காடு வெங்கடாசார்ய ஸ்வாமி முதலான பல மஹான்களை உபதலைவர்களாகக் கொண்டும் சென்னையில் தோன்றிய கமிட்டியின் செயல்கள் அற்புதமாக வெற்றிபெற்று விளங்கினவென்றால் இதில் வியப்பொன்றுமில்லை. ஆனாலும், மனிதர்களில் ஒருவருடைய புத்திக்கும் எட்டாததும், 'பகவானுடைய ஸங்கல்பத்திற்கும் இது கோசரமன்று' என்று கூட நினைக்கத்தக்கதுமான முறையில் காஞ்சியிலும் சென்னையிலும் இவ்வுத்ஸவக்கொண்டாட்டம் நடைபெற்றதென்பதை சென்னை மாகாணத்திலுள்ளாரனைவரும் ஒரே விதமாகச்சொல்லி மகிழும்படி அமைந்த அமைப்பு ஆச்சரியங்களில் தலையான ஆச்சரியமாகவே பாராட்டத்தக்கதாயிற்று.

உலகில் நிகழும் நிகழ்ச்சிகள் நடத்தையில் ஒருவாறிருந்தாலும் அவை நியூஸ் பேபர்களில் எழுதப்படும்போது அளவுகடந்த அதிசயமாகத் தோன்றும்படி அமைக்கப்படுவதுண்டு. இந்நிகழ்ச்சிவிஷயத்திலோ வென்னில்; நடந்தவாறுகளை உள்ளபடி தெரிவிக்கக்கூடிய சொற்கருவிகளோ வாசக சிறப்பங்களோ நம்மிடமில்லையே யென்கிற குறை மிகவுமுள்ளது. ஆனாலும் ஒருவாறு எழுத முன்வருகிறோம்.

ஸ்ரீஸ்வாமியின் திருவவதார நன்னாளாகிய பங்குனித்திருவிசாகம் (27—3—51) பங்குனிமாதம் பதினாலாந்தேதியன்று. அதற்குப் பத்துநாள் முந்தியே காஞ்சீபுரியில் ஸ்ரீஸ்வாமி திருமாளிகையில் இம்மஹோத்ஸவம் ஆரம்பமாகுமென்றும், ஸகலச்ருதி ஸ்மிருதீதிஹாஸ புராண திவ்யப்ரபந்த பாரங்கதர்களும் வித்வான்களும் பக்த பாகவதர்களுமான யாவரும் வந்து இம்மஹோத்ஸவத்தில் அந்வயிக்கவேணுமென்றும் நாற்றிசையும் முன்னமே அழைப்புக் கடிதங்கள் அனுப்பப்பட்டிருந்தன. ஸ்வாமியின் திருமாளிகையிலும் நம்பிள்ளை ஸன்னிதியிலும் பாடசாலையிலும் மற்றும்பல விடங்களிலும் விசித்ராலங்கார பூர்வகமாக ஸகலவித ஸௌகர்யங்களும் செய்விக்கப்பட்டிருந்தன. 17—3—51 தேதியன்று மாலை இம்மஹோத்ஸவாரம்பத்திற்குப் பூர்வாங்கமாக மூன்று மஹாவ்யக்திகள் காஞ்சீபுரியில் வந்து சேர்ந்தாயிற்று.

(1) ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி. திருமலை திருப்பதி சின்னஜீயர் ஸ்வாமியும், (2) வரவேற்புக்கமிட்டித் தலைவரான கனம் சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் W. S. கிருஷ்ணஸ்வாமி நாயுடு அவர்களும், (3) திருக்கோவலூரார்யனுர் ஸன்னிதி ஸ்ரீகஜேந்திராழ்வானும்.

ஸ்ரீமத் திருப்பதி ஜீயர் ஸ்வாமி பரமக்ருபையோடும் ஹ்ருதயபூர்வகமான ப்ரேமத்தோடும் தம்முடைய ஸ்தோமத்தோடெழுந்தருளியிருந்து கோஷ்டியை ஸநாதமாக்கி, இம்மஹோத்ஸவத்தைச் சிறப்பித்தருளினது விலக்ஷணமான ஓர் அதிசயம். கனம் ஜஸ்டிஸ் கிருஷ்ணஸ்வாமி நாயுடு அவர்கள் விஜயம் செய்திருந்து விழாவைத் தொடங்கிவைத்தது மஹத்தான விசேஷம். திருக்கோவலூர் ஸன்னிதி தருமகர்த்தாக்கள் பரமப்ரீதியோடு கஜேந்திராழ்வானை யனுப்பிவைத்து, தினப்படி பின்மாலையிலும் இரவிலும் ஆச்சரியமாக நடந்த திருவீதி பாராயண திவ்யகோஷ்டியைச் சிறப்புறச் செய்வித்தது ஸகலஜன நேத்ரானந்தமான ஸுவிசேஷம். அத்யாபகர்களும் வேதபாடிகளும் பௌராணிகர்களும் வித்வான்களும் பக்தர்களுமாக ஆயிரக்கணக்கில் அன்றே வந்துசேர்ந்து குழுமியிருந்தது குறிப்பிடத்தக்கது. அவர்களின் திருநாமப்பட்டி முடிவில் சேர்க்கப்படும்.

17—3—51 சனிக்கிழமை மாலை 6-மணிக்குமேல் நம்பிள்ளை ஸன்னிதியிலிருந்து வேதகோஷ வாத்யகோஷங்களோடு ஸகலஸ்தோமங்களுடனும் ஸ்வாமியெம்பெருமானருடைய கரஸ்பர்சத்தினுல் புனிதமான சாலக்கிணற்றிலிருந்து கொணர்ந்திருந்த தீர்த்தகும்பத்துடன் ஸ்ரீஸ்வாமி புறப்பட்டெழுந்தருளி இரவு 8-மணிக்குத் தம் திருமாளிகை வாசற்பந்தலில் வந்து சேர்ந்தபின், இம்மஹோத்ஸவத்தைத் தொடங்கிவைப்பதற்கு விஜயஞ் செய்திருந்த கனம் ஹைகோர்ட் ஜட்ஜ் அவர்களுக்குப் பாராட்டுக்கூறி விசேஷமங்களாசாஸனஞ் செய்தபின், ஜட்ஜ் அவர்கள் ஸ்ரீஸ்வாமியினுடைய இம்மஹோத்ஸவத்தில் தாம் ஈடுபடுவதற்கு மஹத்தான பாக்கியம் பெற்றதைக்குறித்து அரும்பெருஞ் சொற்பொழிவாற்றினர். பிறகு பாராயணங்கள் தொடங்கப்பட்டன.

ஏற்பாடு செய்யப்பட்டிருந்தபடி நித்தியமும் பாராயணம் நடந்தவிதம் இங்குத் தெரிவிக்கப்படுகிறது. ஸ்ரீ ஸ்வாமி தமது பாடசாலையின் மூலமாக முப்பத்திரண்டு வருஷகாலமாய் நாடோறும் பின்மாலையில் நடத்திவருகிற திருவீதி ப்ரதக்ஷிண பாராயணம் கிரமப்படி 3-30 முதல் 4-30 வரை நடந்தது. வெளியூர்களிலிருந்து நூற்றுக்கணக்கான வேத பாராயண ஸ்வாமிகள் வந்திருந்தபடியால் அவர்களுடைய திருவீதி பாராயண கோஷ்டியும் காலையும் மாலையுமாக இரண்டு வேளையும் வெகு சிறப்பாக நடந்தேறியது. ஸாமவேதிகள் இருபது ஸ்வாமிகளுக்குமேல் கூடினர்கள். அவர்களுடைய ஸாமகானமும் காலை மாலைகளில் திருவீதிகளில் கர்ணாம்ருதமாக நடந்தேறியது. பின்மாலையில் இரண்டரைமணிகாலமும் இரவில் இரண்டுமணி காலமும் இந்த வீதி பாராயண விசேஷம் இதுவரை எங்குங்கண்டறியாத அபூர்வ ஆச்சரிய ஸந்தர்ப்பமாக இருந்தது. கஜேந்திராழ்வான் முன்னே மென்னடையழகுகாட்ட, பின்னே ஆயிரக்கணக்கான ச்ரோதாக்கள் ஆனந்தக் கண்ணீர் பெருக்கிவர, இடையில் பந்திபந்தியாகத் தென்கலையார் வடகலையாரென்னும் வாசி யில்லாமலும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஸ்மார்த்த மாத்வர்களென்கிற வித்யாஸ மில்லாமலும் கைகோத்து வைதிகர்கள் வேதபாராயணம் செய்து வந்த அழகு வாசாமகோசரமா யிருந்தது. இதை யொட்டியே ஸ்ரீ வைஷ்ணவ சரித்திரத்தில் நம் ஸ்வாமியின் இந்த ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவ நிகழ்ச்சியை ஓர் புதிய சகாப்தமாக எல்லாரும் கருதினர்கள். இதை நமது V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியும் (தேவப்பெருமாள் ஸன்னிதி ஹானரரி டிரஸ்டியான) R. வரததாதாசாரியரும் ஸதஸ்ஸில் எடுத்தும் பேசினர்கள்.

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்



விக்ருதி௵ பங்குனித் திருவிசாகத்தன்று நம்பிள்ளை ஸன்னிதி மங்களாசாஸனக் காட்சி (27-3-1951)

பின்மாலைகளில் திருவீதி ப்ரதக்ஷிண பாராயணங்கள் முடிந்தபின்பு 7-மணி வரையில் ஸாமவேத பாராயணம். உடனே யஜுர்வேதமாரம்பித்து 8½-மணிவரையில் பாராயணம். உடனே 9 மணிவரையில் ரஹஸ்யாநுஸந்தான கோஷ்டி. அதாவது—ஸ்ரீவசநபூஷணம், ஆசார்ய ஹ்ருதயம், தத்வத்ரயம் முமுக்ஷுப்படிஎன்னுமிந்த நான்கு ரஹஸ்யங்களை முகஸ்த மாக அதிகரித்திருக்கின்ற ஸ்வாமிகள் அந்த ரஹஸ்யங்களை நித்யமும் ஒவ்வொரு பகுதியாக ஸேவித்து முடித்தார்கள். 9-மணிக்கு ரஹஸ்யாநுஸந்தான கோஷ்டி முடிந்தவுடனே திவ்ய ப்ரபந்த ஸேவை ஆரம்பமாகி 11-30 மணிவரை நடைபெற்றது. அதற்குப்பின் ஸ்தோத்ர பாட கோஷ்டி. ஆக இவ்வகையில் பன்னிரண்டு மணியாகும்.

உடனே அவரவர்கள் திருவாராதனம் ஸமாப்தி செய்துகொண்டு 2-மணி யடிக்கும் போதே வித்வத் ஸபைக்கு ப்ரஸன்னராவார்கள். ஸ்வாமி திருமாளிகை வரசற்பந்தல் மிக விசாலமாக அமைக்கப்பட்டிருந்தபடியால் அதில் நாடோறும் வித்வத் ஸபை வெகு இன்ப மாக நடைபெற்றது. ஒலிபெருக்கியின் ஏற்பாடுமிருந்தபடியால் வெகு ஆனந்தம். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பெரியார் தலைமைவஹிக்கவும் பல பண்டிதர்கள் உபந்யஸிக்கவும் நேர்ந்த விவரங்கள் முடிவில் தனியாக விளக்கப்பெறும். மாலை 6-மணிககு ஸபை முடிந்தவுடனே, பேரருளாளனுடைய பங்குனியுத்தரத் திருநாள் நித்யப் புறப்பாட்டில் ஸ்வாமிகளெல்லாரும் அந்வயித்து உபய கோஷ்டிகளையுமலங்கரித்துக் கைங்கரியம் செய்யும் பரிசு பாராட்டத் தக்கதா யிருந்தது.

பிறகு 6-30 மணிக்குள் அனுட்டானங்களை முடித்துக்கொண்டு யஜுர்வேதிகளும் ஸாமவேதிகளும் தனித்தனியாகத் திருவீதி பாராயணம் நிகழ்த்தி 8-30 மணிக்கு முடிந்த பின்னர் திவ்ய ப்ரபந்தஸேவை தொடங்கி 10-மணிவரையிலும் நடைபெற்று, பிறகு ஸ்தோத்ரபாட கோஷ்டியோடு சாத்துமுறை நடைபெறும். இந்த கார்யக்ரமங்கள் மணிக் கணக்கில் சிறிதும் ஏற்றத்தாழ்வின்றி ஒழுங்குமுறை தவறாமல் ஸூர்ய சந்திரர்களின் உத யாஸ்தமனங்களைப் பற்றின கட்டளைபோல் வியப்புற நடந்துவந்தது. மூன்று நான்கு நாட்க ளில் இரவு 10-மணிக்குமேலும் ஸங்கீத மஹாவித்வான் அரியக்குடி ராமாநுஜய்யங்கார் முத லானோருடைய ஸங்கீத கலா விநோதங்கள் நடைபெற்றன. இடையில் எட்டாவது திருநா ளன்று (25—3—51) ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமான் ஸன்னிதி தர்மகர்த்தாக்களின் கோரிக்கையின்படி நடந்த விசேஷமாவது—என்றும் எங்கும் கண்டறியாத காட்சியாகக் கூடியுள்ள வேதபாராயண திவ்யகோஷ்டியானது மேற்கே திருவெஃகாஸமீபத்திலுள்ள திருவீதிகளிலும் நடக்க ஸேவிக்கப்பெறவேணுமென்றும், அந்த வேதபாராயண கோஷ்டி யோடுகூடவே ஸ்வாமியும் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமானை மங்களாசாஸநஞ்செய்ய எழுந் தருளவேணுமென்றும் கோரிக்கையிருந்தது. அன்று மாலை 6-மணி முதல் 9-மணிவரையில் இவ்வண்ணம் நிகழ்ந்த நிகழ்ச்சி தனிச்சிறப்பாய் அமைந்தது.

இனி (27—3—51) திருவிசாக நன்னாளின் நிகழ்ச்சி கூறுவோம். தினப்படி நடை பெறும் திருவீதி பாராயணங்கள் முறையே நடந்தபின்னர் காலை 7-மணிக்கு ஸ்ரீஸ்வாமி தேவப்பெருமாளுடைய மங்களாசாஸனத்திற்கு ஸபரிவாரராய் எழுந்தருள ஸந்நாஹமா யிற்று. ஸன்னிதி தர்மகர்த்தாக்களுக்கு அவ்விஷயம் முன்னமே தெரிவிக்கப்பட்டிருந்தபடி யால் பெருமாளுடைய நித்யதிருவாராதன க்ரமங்கள் யாவும் காலை 6-30 மணிக்குள் தலைக் கட்டியாகி, ஸன்னிதியைச் சேர்ந்த யாவத்கைங்கரியபரர்களும் மங்களாசாஸனார்த்தமாக ஸ்வாமியின் வருகையைக் குதூஹலத்துடன் எதிர்பார்த்திருந்தார்கள். ஸ்வாமியும், வேத கோஷம் செய்யும் வேதியர்கள் பின்தொடர 7-மணிக்குத் திருமாளிகையில் நின்றும் புறப்

பட்டு ஸந்நிதி கோபுரத்திருவாசல் சேர்ந்து நிற்க, தாதாசார்ய குடும்பஸ்தர்கள் வேத மோதிப் பூர்ணகும்பமளிக்க உள்ளே சென்று யதாக்ரமமாக தர்மகர்த்தாக்கள் விசால்ஹ்ரு தயத்துடன் செய்வித்த சிறப்புகளைப்பெற்று மங்களாசாஸனஞ்செய்து பிறகு ஆழ்வார் திரு வீதி ப்ரதக்ஷிணமாக நம்மாழ்வார் மணவாளமாமுனிகள் எம்பெருமானார் தேசிகன் ஸந்நிதி களில் ஸேவித்து பின்பு நம்பிள்ளை ஸந்நிதியிலும் குலகூடஸ்தர் ஸந்நிதியிலும் ஸேவித்துப் பரிஜந பரிபர்ஹங்களுடனும் உபநிஷத் கோஷத்துடனும் மாடவீதி வலமாக 9-30 மணிக்குத் திருமாளிகை வாசற்பந்தல் சேர்ந்தாயிற்று.

உடனே, அநேக திவ்யதேசங்களிலிருந்து வந்திருந்த திருமாலை திருப்பரிவட்டம் முதலிய பஹுமானங்கள் ஸ்வாமிக்கு வழங்கப்பட்டன. இந்த பஹுமானங்கள் இம் மஹோத்ஸவாரம்பதினம் முதலாகவே நித்யமும் நாலைந்து திவ்யதேசங்களிலிருந்து வந்து கொண்டிருந்து அப்போதைக்கப்போது ஸ்வாமிக்கு வழங்கப்பட்டுவந்தன. திருமலை திருப் பதி தவிர்ந்த மற்றை வடநாட்டுத்திருப்பதிகள், மலைநாட்டுத் திருப்பதிகள் ஆகிய இவை தவிர மற்ற ஸகல திவ்ய தேசங்களிலிருந்தும் அந்தந்த தேவஸ்தான தர்மகர்த்தாக்களால் பரமப்ரீதியுடனும் விசேஷ பஹுமானத்துடனும் சிறப்புகள் அனுப்பப்பட்டன. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருக்குறுங்குடி மடம் ஜீயர் ஸ்வாமிகள், வானமாமலை மடம் ஜீயர் ஸ்வாமிகள், மைஸூர் ப்ரஹ்மதந்த்ரபரகால மடம் ஸ்வாமிகள் திருவெவ்வுளூர் அஹோபில மடம் ஸ்வாமிகள் முதலான மடாதிபதிகள் விசேஷ பஹுமானங்களை அநுக்ரஹித்தருளினது மல்லாமல் தம்தம் ஆஸ்தானங்களிலிருந்து வித்வான்களையும் அத்யாபகஸ்வாமிகளையும் வேத பாரங்கத ஸ்வாமிகளையும் ஸ்ரீகார்யதுரந்தரர்களையும் அனுப்பியருளி, பல்லாண்டுபாடும் ஸ்ரீமுகங்களையும் ப்ரஸாதித்தருளிக் காட்டின ப்ரேமக்ருபாவிசேஷங்கள் விசேஷித்துக் குறிப்பிடத்தக்கவையாயிருந்தன.

திருக்கோவலூரெம்பெருமான், அக்காரக்கனி [சோளஸிம்ஹபுரம்] எம்பெருமான், திருநாங்கூர் வண்புருடோத்தமன், வயலாலிமணவாளன், திருநறையூர்ப்பெருமாள், திருமா லிருஞ்சோலையழகர் முதலான எம்பெருமான்கள் ஸந்நிதிகளிலிருந்து மிகச்சிறந்த பீதாம்ப ராதிபஹுமானங்கள் தேவஸ்தான தர்மாதிகாரிகளால் வெகு கௌரவமாக அனுப்பப்பட் டிருந்தன. மைஸூர் ஸ்ரீமத் பரகால ஸ்வாமி அநுக்ரஹித்தருளின பஹுமானங்களும் அவர்காட்டியருளின ப்ரேம விசேஷங்களும் வருணிக்க முடியாதவையாயிருந்தன. தூப் புல் விளக்கொளி யெம்பெருமான் ஸந்நிதி வாசலிலுள்ள தம்முடைய மடத்திலிருந்து மேளதாளங்களுடனும் குடை சாமராதி ஸ்தோமங்களுடனும் ஆயிரம் ரூபாய்க்கு மேற் பட்ட மதிப்புள்ள ஜோடி சால்வை ஜோடி பீதாம்பரங்களை அநுக்ரஹிக்கச் செய்தருளினது விசேஷித்துக் குறிப்பிடத் தக்கது.

இனி, நாடோறும் வித்வத் ஸபை நிகழ்ந்த நிகழ்ச்சிகளைப்பற்றி யெழுதுவோம்.

## ஷை மஹோத்ஸவத்தில் நடந்த வித்வத் ஸதஸ்ஸைப்பற்றின விவரணங்கள்.

18—3—51 ஞாயிற்றுக்கிழமை. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமி ஷை ஸதஸ்ஸைத் திறந்து வைத்தருளினபின், மதராஸ் போஸ்டு மாஸ்டர் ஜென ரல் ஸ்ரீமான். C. V. ராஜன் அவர்களின் தலைமையின்கீழ் ப்ரஹ்மஸ்ரீ கல்லிடைக்குறிச்சி ராமகிருஷ்ண சாஸ்த்ரிகளவர்கள் கோபிகாகீதம் பற்றி உபந்யஸித்தார்கள். அதுவே

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்.



28-3-1951 - மாலை சென்னை, ஜார்ஜ் டவுனில் ஸ்ரீ ஸ்வாமியின் ஊர்வலக் காட்சி.

விஷயமாக ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸமுமானபின் அக்ராஸனர் ஸ்ரீ ஸ்வாமியின் பெருமைகளைப்பற்றித் தம் அநுபவங்களை உருக்கமாகப் பேசி ஸ்வாமியை மஹாநிதி யென்று கூறி முடித்தார்.

19—3—51 திங்கட்கிழமை ஸ்ரீமத் திருப்பதி ஜீயர் ஸ்வாமியின் அக்ராஸனத்தில், காஞ்சீபுரம் பச்சையப்பன் காலேஜ் ப்ரின்ஸிபால் சிதம்பரம் ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமிகள் **இந்தியாவில் ஸ்ரீ வைஷ்ணவம்** என்பதுபற்றித் தமிழிலும் ஆங்கிலத்திலும் பேசினர். அதுவே விஷயமாக ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸமுமானபின் அக்ராஸனரின் முடிவுரை.

20—3—51 செவ்வாய்க்கிழமை. ஷை ஜீயர் ஸ்வாமியின் அக்ராஸனத்தின்கீழ், மைலாபூர் ஸம்ஸ்க்ருத கல்லூரி ப்ரின்ஸிபல் ப்ரஹ்மஸ்ரீ K. பாலஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகள் **தர்ம தத்வம்** என்பதுபற்றி உபந்யஸித்தார். ஸ்ரீ ஸ்வாமி அதை ச்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராண திவ்ய ஸூக்திகளைக் கொண்டு விவரித்தார். இன்று ஸபை ஆரம்பத்திற்குமுன் ஸ்ரீ. உ. வே. ஸர். எஸ். வரதாசாரியர் ஸ்வாமி அசிந்திதமாக எழுந்தருளியிருந்து ஸேவை ஸாதித்தது குறிப்பிடத்தக்கது.

21—3—51 புதன்கிழமையன்று ஸ்ரீ. உ. வே. வித்வான். இளங்காடு ரங்காசாரிய ஸ்வாமியின் அக்ராஸனத்தின்கீழ், தேவப்பெருமாள் ஸன்னிதி எக்ஸிக்யூடிவ் டிரஸ்டி. ஸ்ரீ வாஜபேயி. R. மாதவராவ் அவர்கள் **விஷ்ணு பரத்வம்** பற்றி உபந்யஸித்தார், அதைப் பற்றியே ஸ்ரீ ஸ்வாமியின் சொற்பொழிவும் நடைபெற்றது.

22—3—51 வியாழக்கிழமையன்று ஸ்ரீமத் திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமியின் அக்ராஸனத்தின்கீழ், புதுடெல்லி. ஸர். (டாக்டர்) K. S. கிருஷ்ணன், F.R.S., அவர்களும், டாக்டர். T. விஜயராகவன் அவர்களும் ஸ்ரீ ஸ்வாமியினிடத்தில் தங்களுக்குள்ள ஈடுபாட்டைப்பற்றித் தமிழிலும் ஆங்கிலத்திலும் பேசியபின் ஸ்ரீ ஸ்வாமியால் பெரிய **பிராட்டியார் பெருமையைப்** பற்றி உபந்யஸிக்கப்பட்டது.

23—3—51 வெள்ளிக்கிழமையன்று, சென்னை அட்வகேட் ஸ்ரீ. உ. வே. V. ராஜகோபாலாசார்ய ஸ்வாமிகள் (M.L.) அவர்கள் தலைமையின்கீழ், மன்னார்குடி. தர்மஜ்ஞகனபாடி நரஸிம்ஹாசாரியரும், அக்காரக்கனி ஸம்பத் குமாராசாரியரும், ஆழ்வார் திருநகரி திருமலை நல்லான். ராமகிருஷ்ணையங்கார் (சிரோமணி) ஸ்வாமியும் உபந்யஸித்தார்கள். இன்று ஸபையில் சென்னை அட்வொகேட் C. நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமியும் ப்ரஸன்னமாகித் தம்முடைய ஸந்தோஷாதிசயத்தை உருக்கமாகப் பேசினர். உயர் திரு. T. M. நாராயணசாமிப் பிள்ளையவர்களும் இன்று முழுதும் விஜயஞ் செய்திருந்து இம் மஹோத்ஸவத்தில் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கது. இன்றிரவு P. B. ரெங்காசாரியார் பாட்டுக்கச்சேரி நடைபெற்றது.

24—3—51 சனிக்கிழமையன்று, சென்னை மாஜி ஹைகோர்ட் ஜட்ஜ் V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியின் அக்ராஸனத்தின்கீழும், சென்னை அட்வொகேட் ஸ்ரீ. உ. வே. D. ராமஸ்வாமி ஐயங்கார் உபாக்ராஸனத்தின்கீழும் கள்ளக் குறிச்சி அட்வொகேட் ஸ்ரீ. உ. வே. தாதாசாரியர் ஸ்வாமி, நடாதூர் (கூத்தனம்பாக்கம்) தேவநாதய்யங்கார், சென்னை K. வரதாசார்ய சிரோமணி ஸ்வாமி, திருக்குடந்தை இளையவில்லி. பகவத் விஷயம் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, கருடபுரம் வரததேசிகாசார்ய ஸ்வாமி திருநாங்கூர். ப்ர. ஸ்ரீநிவாஸாசாரியர் இவர்களின் உபந்யாஸங்கள் நடைபெற்றன.

25—3—51 ஞாயிற்றுக்கிழமையன்று சேலம் அட்வொகேட் V. N. ஸ்ரீநிவாஸ சக்ரவர்த்தி ஸ்வாமியின் அக்ராஸனத்தின்கீழ், ஸ்ரீ. உ. வே. கோழியாலம். சடகோபாசார்ய சிரோமணி, கல்லிடைக்குறிச்சி. ராமக்ருஷ்ண சாஸ்திரிகள், S. R. (பாலகவி.) ரகூத்தமாசார், பிள்ளைலோகம் பாஷ்யகாராசாரியர், நாவல்பாக்கம் (திருச்சேறை) வரதாசாரியர் சென்னை, பண்டிட் P. R. வரதாசாரியர் இவர்களின் உபந்யாஸங்கள் நடைபெற்றன.

26—3—51 திங்கட்கிழமையன்று, மைஸூர் ஸ்ரீ பரகாலமடம் ஆஸ்தான வித்வான் தீக்ஷாசார்ய ஸ்வாமியின் அக்ராஸனத்தின்கீழ், திருவெவ்வுளூர் ஸ்ரீமதஹோபிலமடம் அழகியசிங்கர் ஆஸ்தான வித்வான்கள் முதலானோர் சாஸ்த்ரார்த்த சர்ச்சை செய்தார்கள். பரோடா ஸம்ஸ்தான ந்யாயவேதாந்த வித்வான் திருநாங்கூர் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியரும், திருக்குறுங்குடிமடம் ஆஸ்தான வித்வான் ஸ்ரீ. உ, வே. (ஸ்ரீவில்லிபுத்தூர்) விஞ்சிமூர் கி. ஆழ்வார் ஸ்வாமியும் ஸ்ரீ ஸ்வாமி விஷயமாக இயற்றியிருந்த ச்லோகமாலிகைகளைப் பொருளுரைத்து உபந்யஸித்தார்கள். இந்த வகையில் மற்றும் சில பண்டிதர்களும் கவிகள் வாசித்துப் போற்றினார்கள். ஸ்ரீபெரும்பூதூர் கல்லூரித் தலைமை யுபாத்தியாயர் சேஷாத்ரியாசார்யரின் வியாகரண சர்ச்சையும் நடைபெற்றது.

27—3—51 செவ்வாய்க்கிழமை. இன்று ஸ்ரீஸ்வாமியின் திருவவதார நன்னாள். சாத்துமுறை கோஷ்டியில் விசேஷ உபந்யாஸங்கள் நடைபெற்றன. ஸ்ரீமதஹோபில மடம் அழகியசிங்கர் ஸ்ரீகார்யம். ஜோ. ரங்காசாரியர் ஸ்வாமி அழகியசிங்கருடைய நியமனத்தை யெடுத்துரைத்து நம் ஸ்வாமியின் பெருமைகளைப் பரக்கப் பேசினார். தேவப் பெருமாள் ஸன்னிதி ஹானரரி தர்மகர்த்தா R. வரததாதாசாரியரும் இம்மஹோத்ஸவம் நடந்த வகையிலும், ஸ்ரீஸ்வாமிக்குப் பெரிய ஸன்னிதியில் சிறப்புகள் நடந்த விஷயத்திலும் தமக்குண்டான ஸந்தோஷாதிசயத்தை வெளியிட்டு, இதுமுதலாக ஸ்ரீ வைஷ்ணவர்களுக்குள் ஒற்றுமை நயம் ஓங்கி வளரவேண்டுமென்கிற தம்முடைய ஆசம்ஸையை வெகு அழகாக எடுத்துரைத்தார். திருவல்லிக்கேணி. உபயபாஷா ப்ரவீண- ஸ்ரீ. உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி தம்முடைய பொங்கும் பரிவைப் பற்றி உருக்கமாகப் பேசினார். இப்படி மஹாவைபவமாக சாத்துமுறை கோஷ்டி நிகழ்ந்து முடிந்தபின் மாலை 4-மணிமுதல் 6-மணி வரையிலும், இரவு 8-மணி முதல் 12 மணி வரையிலும் வித்வத் ஸன்மானங்களும் அத்யாபக வேதபாராயண பௌராணிக ஸ்வாமிகளின் ஸத்காரங்களும் நடைபெற்றன. மாலை கோஷ்டியில் கோயம்புத்தூர் அட்வொகேட் ஸ்ரீ, உ. வே. C, R. ராமஸ்வாமி ஐயங்காரும், இரவு கோஷ்டியில் ஸ்ரீ. உ, வே, ஸ்ரீரங்கம் பண்டிதராஜ. மெ. ஸுந்தரராஜாசார்ய ஸ்வாமியும் தலைமை வஹித்து ஷை ஸன்மானங்களை முறைப்படி நடத்திவைத்தார்கள். ஷை இரண்டு வேளைகளிலும் ஸ்ரீ. உ. வே. ஆசுகவி. வில்லூர் ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி, திருவையாறு மஹாராஜகாலெஜ் ப்ரொபஸர். மதுராந்தகம். தி. ஈ. வீரராகவாசாரியர் ஸ்வாமி, திருக்கண்ணபுரம். கனபாடி. ந்யாய வேதாந்த வித்வான். சௌரிராஜய்யங்கார், ப்ரஹ்மதேசம் ராமாநுஜாசாரியர்ஸ்வாமி, களத்தூர் வேங்கட தீக்ஷிதர், கோயமுத்தூர். வேத வ்யாஸபட்டர். திருமலை ஐயங்கார் ஸ்வாமி முதலானவர்களின் ச்லோகரசநோபந்யாஸாதிகள் விசேஷமாக நடந்தன. மறுநாள் புதன்கிழமை 12-மணி வரையிலும் ஸன்மான கோஷ்டிகள் நடைபெற்று ஸ்ரீஸ்வாமி சென்னைமாநகர்க் கொண்டாட்டங்களை யனுபவிக்க அவ்விடம் எழுந்தருளியாயிற்று.

இவ்வளவோடு காஞ்சீபுர நிகழ்ச்சி முற்றிற்று.

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்.



சென்னை விழாக் கொண்டாட்டம் முதல் நாளன்று, சென்னை ஹைகோர்ட் சீப் ஜஸ்டிஸ் P. V. ராஜமன்னாரவர்களின் தலைமைக் காட்சி. 28-3-1951.

## இனி சென்னைமாநகர் விசேஷங்கள்.

ஸ்ரீகாஞ்சியில் வைதிக விசேஷங்கள் ஒப்புயர்வின்றி நடந்ததுபோலவே சென்னைமாநகரில் லௌகிக விசேஷங்கள் (5 நாள்) அபரிமிதமான வைபவம் பொலிய நடந்தன. 28—3—51 முதல் 1—4—51 வரை 5 நாள் நாடோறும் மாலை வேளையில் 5 மணி முதல் 10 மணி வரையில் இந்த வைபவங்களின் நிகழ்ச்சி. சென்னை எஸ்பிளனேட்டில் பர்மாஷெல் கட்டிடத்திற்குத் தெற்கில் அமைக்கப்பட்டிருந்த விசேஷப் பந்தலில் பதினாயிரம் பக்தர்களின் காட்சி பொலிய, ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பெரியார் அக்ராஸனம் வஹிக்க, சங்கீத கச்சேரிகளும் ஸாஹித்ய உல்லாஸங்களும் காலக்ஷேபங்களும் லோகோத்தரமான முறையில் நடந்தன.

28—3—51 புதன்கிழமையாகிய முதல்நாள் **ஸ்வாகதத் திருநாள்** என்று கொண்டாடப்பட்டது. இன்று, (மதராஸ் ஹைகோர்ட் சீப் ஜட்ஜ்) கனம் நீதிபதி. P. V. ராஜமன்னார் அவர்கள் தலைமை வஹித்தார். வரவேற்புக் கமிட்டியின் தலைவரான கனம். ஜஸ்டிஸ். W. S. கிருஷ்ணஸ்வாமி நாயுடு அவர்கள் ஒவ்வொருநாளும் தமக்குரிய ஆஸனத்தில் அமர்ந்து அலுவல்களைச் செவ்வனே கவனித்தது குறிப்பிடத்தக்கது. இன்று மாலை 5 மணிக்கு சென்னை உப்புட்டூர் ஆழ்வார் செட்டியார் ராமாநுஜ கூடத்திலிருந்து புறப்பட்டு ஸ்ரீ ஸ்வாமி ஊர்வலமாக விழாப்பந்தலுக்கு 6-மணிக்கு வந்துசேர, பூர்ணகும்பங்களுடன் வாசலில் வரவேற்பு ஆனதும் திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமியின் திவ்ய பீதாம்பர ப்ரஸாதத்தை ஷை தேவஸ்தானம் தர்மகர்த்தா வேமூர் ரங்கநாதம் செட்டியாரவர்கள் ஸ்வாமிக்குப் பரிசளித்தார். 6-15 முதல் ப்ரார்த்தனையும் சங்கீதமும் கானபடு, கீர்த்தனபடு ஸ்ரீமதி C. ஸரஸ்வதிபாய் அவர்களால் நடத்தப்பட்டது. 6-45 முதல் வரவேற்புக்கமிட்டித் தலைவரவர்களது வரவேற்புச் சொற்பொழிவு நடந்தது. 7 மணி முதல் கனம் நீதிபதி P. V. ராஜமன்னாரவர்களால் விழா அரங்கேற்றம் நடந்தது. 7-20 முதல் ஐந்து பாஷைகளில் ஐந்து பெரியோர்கள் ஸ்வாகத பத்ரிகைகள் வாசித்து ஸ்வாமியிடம் ஸமர்ப்பித்தார்கள். 1 ஸ்ரீமான் சிரோமணி வித்வான் கந்தாடை நரஸிம்ஹாசாரியர் ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்தில்; 2 பண்டித திருவாலி ராமாநுஜாசாரியர் ஸ்வாமி தமிழில். 3 ஸ்ரீ. A. C. ஸ்ரீமந்நாராயணாசாரியர் ஸ்வாமி தெலுங்கில். 4 A. S. ஸுலோசநா விசாரதா ஹிந்தியில். 5 டாக்டர். T. விஜயராகவன் இங்கிலீஷில். பிறகு **ச்ரிய: பதித்வம்** என்பதுபற்றி ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸமும் தலைவரின் முடிவுரையும் வந்தனோபசாரமும் மங்களமும். ஷை முதல்நாள் நிகழ்ச்சியைப்பற்றி ஹிண்டு பத்ரிகையில் வெளியிடப்பட்டிருந்த வியாஸம் ஸாரமாயிருப்பதால் அதுவும் இங்குச் சேர்க்கப் படுகிறது.

# SERVICES IN CAUSE OF HINDUISM

## TRIBUTE TO VIDWAN ANNANGARACHARYA

Hindu, Madras, March 29.

Tributes to the scholarship and erudition of Sri Annangaracharya Swamigal of Kancheepuram were paid by Mr. P. V. Rajamannar, Chief Justice, and Mr. Justice Krishnaswami Naidu on the occasion of the Shastiabdapurthi celebration of the Vidwan. The function was held last evening in the Southern India Chamber of Commerce grounds near Fort Station.

Sri Annangaracharya Swamigal was taken in procession from the Vuputur Alwar Chetti Choultry to the pandal near the Fort Station. On arrival, he was received with *purna kumbam* by Mr. Justice Krishnaswami Naidu, Chairman of the Reception Committee. The function commenced with prayer by Gayanapatu Kirtanapatu Srimati C. Saraswati Bai.

Mr. Justic Krishnaswami Naidu, welcoming the Chief Justice and others present, referred to the life of Sri Annangaracharya Swamigal. The Vidwan, he said, was born in a pious family and was well versed in the Vedas, scriptures and the puranas. He has written valuable treatises on religious subjects, and had a capacity to lucidly expound the great religious truths contained in our sacred books. The public of Madras, in particular, were grateful to him for the instructive lectures on Gita he had been giving for more than twenty years.

"The great treasures of our religion" Mr. Justice Krishnaswami Naidu continued, "are in Sanskrit language though some of the greatest truths are also found in Tamil and Telugu and other languages. One realised very late in his life that lack of knowledge of Sanskrit is a great disqualification and handicap for every Hindu. A of knowledge Sanskrit is very essential for every Hindu. It is a tragedy that it has been neglected and it has not been given its true and proper place in our educational system".

In Hindu society, fashioned according to the teaching of the Gita emphasising the principle of *karma*, there could be no social friction, the speaker said. He emphasised that it was the sacred duty of every Hindu to preserve the greatness of Hinduism. Mr. Justice Krishnaswami Naidu added: "In recent times there have been springing up in our country organisations which have been doing propaganda against Hinduism and our ancient sacred books. Though such organisations may have justification on social and economic grounds, they have been misdirected to divert their activities to attack their own religion and its high principles. One cannot but account for such disruptive influences the reason that the fault lay not with them but on those whose duty it was to check their influence by placing before them the real and fundamental principles of Hinduism making them realise its innate truths and emphasising its moral and ethical aspects, at the same time adapting and adjusting the faith to the vast environmental changes that have been taking place.

Mr. Justice Krishnaswami Naidu appealed for funds to construct a hall in George Town in the name of Sri Annangaracharya Swamigal for conducting religious discourses. He then requested the Chief Justice to inaugurate the celebrations.



சென்னை விழாக் கொண்டாட்டம் இரண்டா நாளில், சென்னை, கல்வி மந்திரி கனம் ஸ்ரீ. K. மாதவ மேனன் அவர்களின் தலைமைக் காட்சி. 29-3-1951.

Mr. P. V. Rajamannar said Sri Annangaracharya was a 'walking encyclopaedia of *Vaishnavism* and *Visishtatvaita Siddanta*' His learning was monumental. But that alone was not sufficient, to make one a great writer or a teacher. The Vidwan was not only learned but also had the gift of lucid and powerful expression. He also referred to the services the Vidwan had been rendering. They should all pray to God that he might continue to do that service for many more years for the cause of Hindu religion and culture that was so sacred and dear to them.

Proceeding, Mr. P. V, Rajamannar said that the supreme value of *Vaishnavism* and *Visishtadvaita Siddanta*, according to the alwars and Acharyapurushas, really lay in the highly exalted place which emotion occupied in their religious experiences. All religions led to the same goal—*mukti* and *moksha*. But the paths were many. The path of the pure *advaiti* was highly intellectual and very often people could not rise to such a height. But in Visishtadvaita Siddanta, the path was really emotional. It would not be inaccurate if that path was called a two-fold path consisting of bhakti marga and prapatti marga which had subtle differences. The bhakti marga was in the nature of yoga which demanded severe discipline. The prapatti marga was a path of self-surrender. Visishtadvaita Siddanta had a universal appeal. That quality of abandonment and self-surrender appealed to every class of human being and also came much more easily than the intellectual approach.

Mr. Rajamannar also supported the appeal of Mr. Justice Krishnaswami Naidu for funds to construct a hall for holding religious discourses.

Welcome addresses were presented to the Vidwan in Sanskrit by Siromani K. Narasimhachariar, in Tamil by Pandit Thiruvali Ramanujachariar, in Telugu by Srimati A. Sulochana Visharad and in English by Dr. T. Vijayaraghavan.

The Vidwan then delivered a discourse on 'Sriahpathithvam.'

Mr. K. S. Champakesa Iyengar proposed a vote of thanks.

A five-day programme has been arranged in connection with the celebration. இப்படி 5 நாளும் ஹிண்டு முதலிய பத்ரிகைகளில் வெளிவந்தவை காண்க.

இரண்டாவது நாள் 29—3—51 வேதத்திருநாளென்று கொண்டாடப்பட்டது. இன்று, சென்னை கல்வி மந்திரி. கனம் ஸ்ரீ. K. மாதவமேனன் தலைமை வஹித்தார். ஸங்கீத வித்வான் K. கோபால்ஸாமி செட்டியார் ப்ரார்த்தனையும் ஸங்கீதமும். பிறகு தலைவர் வரவேற்பும் தலைவர் முன்னுரையும். இன்று வேதத்திருநாளாதலால், வேதத்தின் பகுதிகளாகிய ஸம்ஹிதை பதம் க்ரமம் ஜடை கனம் ப்ராஹ்மணம் என்பவற்றை வைதிகர்களான ஸ்ரீ. உ. வே. தி. வி. சிங்கராசாரியர். மாமண்டூர் நாஸிம்ஹாசாரியர். திருக்கண்ணபுரம் ராகவாசாரியர். சென்னை சிங்கராசாரியர் ஆகிய இவர்கள் கர்ணச்ராவ்யமாக எடுத்து ஓதினார்கள். வித்வான் R. ரங்கராமாநுஜய்யங்கார் அவர்கள் முதலானவர்களால் வீணையும் வாய்ப்பாட்டும். பிறகு வேத தோரணை என்பதுபற்றி ஸ்ரீ ஸ்வாமியின் உபந்யாஸமும் தலைவர் முடிவுரை முதலியனவும்.

மூன்ருவது நாள் 30—3—51 வெள்ளிக்கிழமை பிரபந்தத் திருநாள். இன்று, சென்னை கர்ஜன் அண்டு கம்பெனித் தலைவர் ஸ்ரீ. C. சேஷாசலம் செட்டியார் M.A.B.L. அவர்கள் தலைமை வஹித்தார்கள். ஸ்ரீ. ஆசால் ராஜம்மாள் ராமாநுஜாசாரியர் வகுப்பினரால் ப்ரார்த்தனையும் பன்னிரு ஆழ்வார் பாசுரங்களும் நடந்தன. பிறகு தலைவர் வரவேற்பும் தலைவர் முன்னுரையும். பிறகு, திருவல்லிக்கேணி வை. மு. கோதைநாயகியார் தலைமை கொண்ட மகாத்மாஜீ சேவா சங்கத்தினரால் இன்னிசையும் ஆண்டாள் திருக்கல்யாணம் நாட்டிய நாடகமும் வெகு அற்புதமான காட்சி. பிறகு திவ்யப்ரபந்த உபதேசம் என்பதுபற்றி ஸ்ரீஸ்வாமியின் உபந்யாஸம். பிறகு தலைவர்முடிவுரையும் வந்தனோபசாரங்களும் மங்களமும்.

நான்காவது நாள் 31—3—51 சனிக்கிழமை ப்ரவர்த்தகத் திருநாள். இன்று, அடையார் வாசகசாலை டைரக்டர் காப்டன் வைத்யரத்ன. G. ஸ்ரீநிவாஸமூர்த்தி M.B. & C.M. அவர்கள் தலைமை வஹித்தார்கள். ப்ரார்த்தனையும் இன்னிசையுமானபின் தலைவர் வரவேற்பும் தலைவர் முன்னுரையும். பிறகு ஆசார்ய மஹிமை சித்திரக்காட்சி வெகு அற்புதமாயமைந்தது. பிறகு ஸ்ரீஸ்துதி இன்னிசையானபின் ஆசார்ய ப்ரபாவம் பற்றி ஸ்ரீஸ்வாமியின் உபந்யாஸம். பிறகு தலைவர் முடிவுரை, வந்தனோபசாரம், மங்களம். [நம்முடைய ஸித்தாந்தத்திற்கு ப்ரவர்த்தகர்களாயிருந்த ஆசார்யர்களின் பெருமைகளை விளக்கிய நாளானதுபற்றி இன்று ப்ரவர்த்தகத் திருநாளெனப்பட்டது.] முடிவில் பண்டிதை S. கிருஷ்ணவேணியம்மையின் வாழ்த்துச் சொற்பொழிவு நடந்தது.

ஐந்தாவது நாள் 1—4—51 ஞாயிற்றுக்கிழமை அபிநந்தனத்திருநாள். இன்று, திவான் பஹதூர் (ரிடைர்ட் ஜில்லா ஜட்ஜ்) K. S. ராமஸ்வாமி சாஸ்திரியாரவர்கள் தலைமை வஹித்தார்கள். முதல்நாள்போல் இன்றும் ஸ்ரீஸ்வாமி விசேஷ பரிவாரங்களுடன் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டார். இன்று விழாப்பந்தலில் காட்சி மிகமிக விசித்திரமாயிருந்தது. ஆஸ்திக மஹனீயர்களில் விஜயஞ் செய்யாதவர்கள் அநேகமாக இல்லையென்றே சொல்லலாம். ப்ரார்த்தனையும் இன்னிசைக் கச்சேரியுமானபின் தலைவர் வரவேற்பும் தலைவர் முன்னுரையும் ஆகி வாழ்த்துச் செய்திகள் வாசிக்கப்பட்டன. ஸ்ரீமான் G. V. லக்ஷ்மீ வராஹமையங்கார் செயலாளர்களின் அறிக்கையை (ஆங்கிலத்தில்) வாசித்தார். பிரபல பண்டிதர்களும் சாஸ்த்ரஜ்ஞர்களும் வக்கீல்களும் வியாபாரிகளு மானவர்கள் ஸ்ரீ ஸ்வாமியின் பெருமைகளைப்பற்றி மனமுருகிக் கொண்டாடிப் பேசினார்கள். அவர்களாவார், ஸ்ரீ.

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்.



சென்னை விழாக் கொண்டாட்ட மூன்று நாளில் சென்னை, கர்ஜன் அண்டு கம்பெனித் தலைவர்
ஸ்ரீ C. சேஷாசலம் செட்டியார் M. A. B. L. அவர்களின் தலைமைக் காட்சி. 30-3-1951.

V. V. ஸ்ரீநிவாஸய்யங்காரவர்கள், உ. வே. காரப்பங்காடு வெங்கடாசார்ய ஸ்வாமிகள், K. வெங்கடஸாமி நாயுடு அவர்கள், கல்லிடைக்குறிச்சி ராமகிருஷ்ண சாஸ்திரிகள், கடலங்குடி நடேச சாஸ்திரிகள், K. வரதாசார்ய சிரோமணி, வேலூர் ரங்கநாதம் செட்டியார், அருளிச் செயல்மயம் திருவேங்கட ராமாநுஜ பாகவதர், நாதமுனி ராமாநுஜதாஸர், எதிராஜ ராமாநுஜதாஸர், கோதைநாயகியம்மாள், ஜலகம் சுப்பிரமணியநாயுடு முதலானோர் பலர்.

B. சந்திரகுப்தா, B.A., என்னும் பக்த மணியானவர் ஸ்ரீஸ்வாமியின் பெருமைகளைத் தெலுங்கு பத்யங்கள் நூறில் அடக்கி ஒரு காவியம் செய்திருந்தார். அதில் பல பத்யங்களை ஸபையில் வாசித்து அரங்கேற்றினர். இவர் வயதில் சிறுவராயிருந்தும் பக்தியிலும் கவித்வத்திலும் மிகப் பெரியாராதலால் சிறுமாமனிசரென்று கொண்டாடப் பட்டார். இவரைப் போல் மற்றும் பலரும் பல பாஷைகளில் ஸ்வாமியைப்பற்றிக் காவியங்களும் துதிகளும் எழுதிக்கொண்டு வந்திருந்தும் அவகாசக் குறைவினால் ஸபையில் அவைகள் வாசிக்கப் படாமல் அன்னவர்களின் பெயர்கள்மாத்திரம் தெரிவிக்கப்பட்டன.

இம் மஹோத்ஸவத்தில் கலந்து கொள்ள அவகாசப்படாமைக்கு வருந்திப் பல பெரியார்கள் எழுதி யிருந்த கடிதங்களில் சில வாசிக்கப்பட்டன.

பிறகு, கனம் நீதிபதி W. S. கிருஷ்ணஸ்வாமி நாயுடு அவர்களால் ஸ்ரீஸ்வாமிக்கு நினைவுமலர் அளிக்கப்பட்டது. இந்நினைவுமலர் தமிழ் தெலுங்கு இங்கிலீஷ் ஹிந்தி ஆகிய நான்கு பாஷைகளிலும் அச்சிட வேணுமென்று உத்தேசமிருந்தது. ஆனால் தமிழொன்றில் மாத்திரமே அப்போது அச்சாகி முடிந்தது. தெலுங்கில் பிறகு முடிந்திருக்கிறது. விரைவில் அது வெளிவருமென்று தெரிகிறது. தமிழில் வெளிவந்த நினைவுமலரில் உள்ள விஷயங்கள் இங்கு சுருக்கமாகத் தெரிவிக்கப்படுகின்றன. கனம் நீதிபதி W. S. கிருஷ்ணஸ்வாமி நாயுடு அவர்கள் ஆங்கிலத்தில் எழுதியுள்ள முன்னுரை முன்னேசேர்க்கப்பட்டிருக்கின்றது. பண்டிட். P. R. வரதாசாரியர் ஸ்ரீ ஸ்வாமியின் திவ்ய சரித்திரத்தை வெகு அழகிய வசன நடையில் எழுதியுள்ளார்; ஸ்ரீ ஸ்வாமி அருளிச் செய்துள்ள 272 நூல்களை அகராதி முறையில் தெரிவித்துள்ளார். தற்காலம் விலைக்குக் கிடைக்கக்கூடிய புத்தகங்களையும் தெரிவித்துள்ளார். ஸ்ரீ ஸ்வாமியால் சென்னையில் ஸ்தாபிக்கப்பட்டுள்ள ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபை ஸம்பந்தமான விஷயங்களையும் அந்த ஸபையின் மூலமாக இதுகாறும் வெளியிடப்பட்டுள்ள நூல்களையும் விவரித்துள்ளார். பத்தெட்டு மாத காலமாக ஸ்ரீ ஸ்வாமியால் வெளியிடப்பட்டு வருகின்ற ஷஷ்டிபூர்த்தி நினைவுமாலை என்னும் தொகுதியில் வெளிவந்துள்ள நூல்களைப் பற்றியும் தெரிவித்துள்ளார். திருவல்லிக்கேணி உ. வே. பண்டித அ. மு. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமியால் தமிழுரையோடு எழுதப்பட்டுள்ள ஆசார்ய வைபவத்விசதீ என்கிற காவியம் ஸ்வாமியின் வைபவத்தை விளக்கும் நூல்; அதுவும் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமான்களான. ஸர். எஸ். வரதாசாரியர், D. ராமஸ்வாமி ஐயங்கார், வி. வி. ஐயங்கார், (பாம்பே), A. K. சடகோபாசார் (பாம்பே), C. R. ராமஸ்வாமி ஐயங்கார், கோயமுத்தூர், ஸ்ரீ வேதவ்யாஸபட்டர் ஸ்வாமி கோயமுத்தூர், திருக்குடந்தை இளையவில்லி ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி, திருக்குடந்தை. (ராவ்ஸாஹிப்) S. ரங்கஸாமி ஐயங்கார், திருக்குறுங்குடி மடம் ஸ்ரீகார்யம் ஸ்வாமி, வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி, காரப்பங்காடு வெங்கடாசாரியர் ஸ்வாமி, மதுரைச் செந்தமிழ்ப் பத்திராதிபர் ஸ்வாமி, மதுரை மநீஷிமாந்ய R. நரஸிம்ஹய்யங்கார் ஸ்வாமி, டாக்டர். V. ராமையங்கார், ஸ்ரீ பரகாலமடம்

ஸ்ரீகார்யம் ஸ்வாமி, ஆழ்வார் திருநகரி திருமலை நல்லான் ராமகிருஷ்ணையங்கார் ஸ்வாமி, கருடபுரம் வரததேசிகாசாரியர் ஸ்வாமி, அன்பில் ஸௌம்ய நாராயணய்யங்கார், ஸாமி வெங்கடாசலம் செட்டியார் முதலான பல பிரமுகர்களின் மதிப்புரைகள் ஆங்கிலத்திலும் தமிழிலும் ஸம்ஸ்க்ருதத்திலும் வெளியிடப்பட்டிருக்கின்றன. ஸ்ரீவில்லிபுத்தூர். (வைகுண்ட வாஸி) மேலைவாத்தியார். திருமலை ஐயங்கார் ஸ்வாமி நம்ஸ்வாமிவிஷயமாக அருளிச்செய் திருந்த மங்களாசாஸனம் ப்ரபத்தி ஸுப்ரபாதம் திநசர்யா என்னும் வடமொழி ச்லோக மாலிகைகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஸுப்ரஸித்த வித்வான்களுடையவும் மடாதிபதி களுடையவும் திருவுருவப்படங்கள் (25) சேர்க்கப்பட்டிருக்கின்றன. (இந்த நினைவுமலர் ஸ்ரீமான். ஸி. ராதாகிருஷ்ணய்யா, 147, அண்ணாபிள்ளைத் தெரு, ஜி. டி., மதராஸ், என்கிற விலாஸத்தில் 2 ரூபாய் விலைக்குக் கிடைக்கும்.)

ஷை நினைவுமலர் அளித்தபின்பு, அன்றைச் சபைத் தலைவர். திவான்பகதூர், K. S. ராமஸ்வாமி சாஸ்திரியாரவர்களால் 6001 ரூ. கொண்ட பணமுடிப்பு கமிட்டியின் சார்பாக ஸ்ரீஸ்வாமிக்குப் பரிசளிக்கப்பட்டது.

அதன் பிறகு **பகவத்ஸந்தேசம்** என்பது பற்றி ஸ்ரீஸ்வாமி உபந்யஸிக்கத்தொடங்கி * மத்பக்தஜந வாத்ஸல்யம் * என்கிற சுலோகத்தினால் பகவான் தெரிவித்திருந்த பக்தஜந வாத்ஸல்யத்தை விவரித்து, இம்மஹோத்ஸவத்தை நடத்திவைத்தவர்களுக்கும், இதில் கலந்து கொண்டு தம்மைக் கௌரவித்த வித்வான்களுக்கும் மஹான்களுக்கும் நன்றி பாராட்டி முடித்தார்.

பிறகு, கனம் நீதிபதி கிருஷ்ணஸ்வாமி நாயுடு அவர்களும் அன்றைத் தலைவரான திவான்பஹதூர் ராமஸ்வாமி சாஸ்திரியாரவர்களும் இம்மஹோத்ஸவத்தில் தாங்கள் அந்வயிக்கப்பெற்ற பாக்கியத்தைப்பற்றி வெகு ஆனந்தமாக முடிவுரை கூறியபின் வந்தனோபசார மங்கல வாழ்த்துகளுடன் ஸபை இனிது முடிந்தது.

காஞ்சியிலும் சென்னையிலும் இவ்வளவு சிறப்பாக இம்மஹோத்ஸவம் நடைபெற்றதற்கு மூலகாரணம் பல மஹான்களின் முயற்சியே யானாலும் ஸ்ரீமான் காலபாடி. ராதா கிருஷ்ணய்யா அவர்களின் விடாமுயற்சி மிகவும் போற்றத்தக்கது. மற்றும், K. திருவேங்கடாசாரி அட்வொகேட், M. A. கிருஷ்ணம்மாள் அட்வொகேட், V. M. கோதைநாயகியம்மாள் ஜகன்மோகினி எடிடர், V. M. ஸ்ரீநிவாஸன் அட்வொகேட், G. ஸ்ரீநிவாஸலு செட்டியார், பண்டிட். P. R. வரதாசாரியார், M. தேவராஜுலு நாயுடு, M. R. அப்பாதுரைப் பிள்ளை, கொத்தூர் அப்பைய செட்டியார், கொஞ்சேடி ஸுப்ராயுலு செட்டியார், அவர் தம்பி ராமசந்திர செட்டியார், B. சந்திரகுப்தா, G வேதாசலம் செட்டி, ஸி. ராமாநுஜய்ய செட்டி, R. ஸுப்பராய ஸுக்கல், G. V. லக்ஷ்மீவராஹன், P. N. துரைசாமி நாயுடு, V. R. எதிராஜுலு செட்டி, P. E. ஸ்ரீநிவாஸுலு நாயுடு, M. நரஸிம்மலு செட்டி முதலான பலர் அதிக சிரத்தையுடன் ஒத்துழைத்தது மிகவும் பாராட்டத்தக்கது.

---

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்.



சென்னை விழாக் கொண்டாட்ட நான்கா நாளில் அடையார் வாசகசாலை டைரக்டர்
காப்டன். வைத்யரத்ன G. ஸ்ரீநிவாஸமூர்த்தி M.B. & C.M. அவர்களின் தலைமைக் காட்சி. 31-3-1951.

# ஒரு முக்கியமான விஜ்ஞாபனம்.

ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவத்திற்கு நேரில் வந்திருந்து அநுபவித்துத் திரும்பி ஊர் சென்றவர்களில் பலரும், இவ்விசேஷங்களைக் காதாரக் கேட்டு ஆனந்தித்தவர்கள் பலரும் தங்களுடைய ஆனந்தம் உள்ளடங்காமல் பல ஸ்ரீமுகங்களை யெழுதி யனுப்பியிருக்கிறார்கள். அவற்றையெல்லாம் அச்சிட்டு வெளியிடவேணு மென்று அவர்களும் விரும்பி யிருக்கிறார்கள், நமக்கும் அவற்றை வெளியிடக் குதூஹலமுண்டாயிற்று. ஆனால், இந்த ஏப்ரல் மாதத்தில் வெளியிடப்பட்டு இன்று நமக்குக் கிடைத்த (ஸ்ரீஅஹோபில மடத்துப்பத்ரிகையான) ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில் **செய்திகள்** என்கிற பகுதியில் "ஸ்ரீ அண்ணங்கராசாரிய ஸ்வாமியின் ஷஷ்ட்யப்தபூர்த்திமஹோத்ஸவம்" என்கிற மகுடத்தின் கீழ் வெளியிடப்பட்டுள்ள நீண்டதோர் வியாஸமானது எமக்குக்கிடைத்திருக்கின்ற ஸகலகடிதங்களிலுமுள்ள ஸாராம்சங்களையும் உட்கொண்டு இருப்பதனால் அந்த ந்ருஸிம்ஹப்ரியா வியாஸத்தையே யெடுத்து இங்கு வெளியிடுகிறோம். இந்த வியாஸத்தில் கண்ட விஷயங்களையே பலரும் பலவகையாக எழுதியிருப்பதால் அவற்றை யெல்லாம் தனித்தனியே பிரசுரிக்க அவசியமில்லை யென்று முடித்துக்கொண்டோம். ஆனாலும் ஒருமஹானுடைய ஸ்ரீமுகம் மாத்திரம் அவசியம் வெளியிடத்தக்க தென்று தோன்றினபடியால் மேலே அதை வெளியிடுகிறோம்.

**ந்ருஸிம்ஹப்ரியா வியாஸம் வருமாறு:—**

# ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்திமஹோத்ஸவம்

நாளது பங்குனிமீ 14உ (27-3-51) மங்களவாரமும் விசாக நக்ஷத்ரமும் கூடியவன்று காஞ்சீபுரம் ஸ்ரீ. உப. ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியினுடைய ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவம் வெகு விமர்சையாக நடந்தேறியது. அதையொட்டி காஞ்சி மாநகரில் முந்திய பத்து தினங்களும் சென்னை மாநகரில் பிந்திய ஐந்து தினங்களும் ஒரு பெரிய ஸ்ரீவைஷ்ணவ விழாவாகக் கொண்டாடப்பட்டன. உலகத்தில் அநேகர்களுக்கு ஷஷ்ட்யப்தபூர்த்தி கொண்டாடப்பட்டு வருவதைக் கண்டிருக்கிறோம்; இனியும் காண்போம்; ஆயினும் இந்த ஸ்வாமியினுடைய ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவத்திற்கு ஸமானமாக வேறொருவருக்கும் நடந்தது கிடையாது; இனியும் நடக்காதென்று உறுதியாகச் சொல்லலாம். ஏனெனில் இப்பொழுது நிகழ்ந்த உத்ஸவம் அந்தஸ்வாமியைக் குறித்து இருப்பினும் உண்மையில் அது ஸ்ரீவைஷ்ணவநாடு ஒருங்கே திரண்டு அநுபவித்த பெரியதோர் திருவிழாவெனச் சொல்லவேண்டும். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு இந்தஸ்வாமி செய்ததும் செய்துவருவதுமான அரும்பெருந் தொண்டுகளைக்கண்டு உகந்த ஸ்ரீவைஷ்ணவ உலகம்முழுதும் ஸ்வாமிக்கு ஹார்த்தமாக நடத்திவைத்த ஒரு மஹோத்ஸவமிது என்பதுதான் தத்வம். ஸ்வாமி அந்த உத்ஸவத்தைத் தமது அந்தரங்கர்களைக்கொண்டும் அபிமானிகளைக்கொண்டும் இந்தப்

பதினைந்து தினங்களிலும் நடத்திய நிகழ்ச்சிக்குறிப்புக்களை விவரிக்க இங்கே இடம் காணாது. வேதங்களும் அருளிச்செயல்களும் ரஹஸ்யங்களும் ஸ்தோத்ரங்களும் அந்த பத்துதினங்கள் கழிந்தபிறகுங்கூட காஞ்சிமாநகரில் இன்னமும் ஒலித்துக்கொண்டிருக்கின்றன. அவ்வளவு அழகான கோஷ்டி பாராயணங்களும்ஸேவாகாலங்களும் சிற்றஞ்சிறு காலைதொடங்கி இரவு நெடுநேரம்வரையில் நடந்தேறி வந்தன.

எத்தனையோ நூற்றாண்டுகளுக்குமுன்பு நம்மாழ்வார், 'பொலிக பொலிக பொலிக, வென்றும், 'கண்டோம் கண்டோம் கண்டோம்' என்றும் ஒருமுறைக்கு மும்முறையாக ஆரவாரித்துச்செய்த மங்களாசாஸநம் இப்பொழுதுதான் பலித்ததென்று எண்ண இடமுண்டாகியது. பலவாண்டுகளாக தென்கலை வடகலை கக்ஷிவ்யவஹாரங்களுக்குப் பெயர்பெற்ற காஞ்சிமாநகரில் தென்கலையென்றும் வடகலையென்றும் வித்யாஸம் சிறிதுமின்றி ஸ்ரீவைஷ்ணவ ச்ரேஷ்டர்களனைவரும் ஒன்றுகூடி ஸ்வாமியின்திருமாளிகையிலும் வெளியே திருவீதிகளிலும் கோஷ்டிகளிலும் வித்யாசமின்றி அந்வயித்தார்களென்றால் சிலர் நம்ப மறுக்கலாம். நேரில்கண்டநுபவித்தவர்களுக்கே தெரியும் அதன் பெருமை. இதிலிருந்து '' ஹரி பக்ததாஸ்ய ரஸிகா: பரஸ்பரம் க்ரயவிக்ரயார்ஹதசயா ஸமிந்ததே'' என்று தேசிகன் அன்று ஆசாஸித்தது இன்று பலித்தது என்று எண்ண இடமிருக்கிறது. அருளாளன் இன்னருளால் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு இதுஒரு சுபஸூசனை, கலா பேதங்களால் ஏற்பட்ட சச்சரவுகளெல்லாம் ஒழிந்து ஒருமிக்க ஸ்ரீவைஷ்ணவர்களனைவரும் ஒத்து வாழவேண்டுமென்றால் அது இந்த மஹோத்ஸவத்தை இந்த அழகியமுறையிலே நடத்த ஏற்பாடு செய்த ஸ்ரீமான் அண்ணங்கராசார்யஸ்வாமியொருவர் தான் செய்யக்கூடிய கார்யம்.

அவருடைய ஹார்தமான அபிப்ராயமும் ஐகரஸ்யத்திலே அவருக்குள்ளநோக்கும், இம்மஹோத்ஸவ வாயிலாக உலகோர்கள் அறியவும், இனி அவரை ஒருசார்பார்கள், மட்டும் தம்மைச் சேர்ந்தவர் என்று கொண்டாடாது அசேஷ ஸ்ரீ வைஷ்ணவர்களும் நம் தர்சனத்தை அரும்பாடுபட்டு அபிவ்ருத்தி செய்துவரும் உன்னத புருஷர் இவர் என்று கொண்டாடவும் ப்ராப்தம். ஸ்வாமியும் ப்ரதிவாதி பயங்கரம் என்று தமக்கு ஜந்மப்ராப்தமாயுள்ள பிருதத்தில் தவிர பயங்கராம்சம் சிறிதும் இல்லாதவராய் அசேஷ ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கும் அப்யங்கரராய் நெடுநாள் அரோகத்ருடகாத்ரராக வாழ்ந்துவர வேண்டுமென்றும் இதோப்யதிகமாக உபந்யாஸங்களையும், க்ரந்த நிர்மாணங்களையும் செய்து கொண்டு அனைவரையும் ரஞ்ஜிப்பிக்க வேண்டுமென்றும் அஸூயாதிகளால் சிதறிக்கிடக்கும் ஸ்ரீவைஷ்ணவஸமூஹத்தவர்களை ஒன்றுசேர்த்து உய்விக்க வேண்டுமென்றும் ஸர்வசரண்யன் திருவடிகளிலே ஸவிநயம் ப்ரார்த்திக்கிறோம். **இந்த வியாஸம் ஸ்ரீந்ருஸிம்ஹ ப்யரிவில் வெளிவந்தது.**

## கோயமுத்நூர் ஸ்ரீஉவே வேதவியாஸபட்டர் திருமலாசார்ய ஸ்வாமியின் ஸ்ரீமுகம்

*(6-4-51)*.............. விண்ணப்பம். உபயகுசலம். அடியேன் அவ்விடம் நம் ஸ்வாமியின் மஹோத்ஸவத்தைக் காஞ்சீபுரத்திலும் சென்னைப் பட்டணத்திலும் பூர்த்தியாக இருந்து கண்ணாரக்கண்டு களித்து ஊர்வந்து சேர்ந்தது முதல் உண்மையில் மூடஹ்ருதயனாயிருக்கிறேன். எந்தவியாபாரத்திலும் நெஞ்சு செல்லாமல் இரவும் பக

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்



ஷை மஹோத்ஸவ ஸம்பந்தமான வரவேற்புக் கமிட்டி மெம்பர்களின் திரள்.

லும் அவ்வநுபவங்களையே சிந்திப்பதும் திகைப்பதுமா யிருக்கிறேன். "ஆறேழு மாத காலமாகப் பல பெரியார்கள் முன்னின்று விசேஷ முயற்சிகளைச் செய்துவருவதால் இம்மஹோத்ஸவம் லோகாபிராமமாகவே நடந்தேறும்" என்று பொதுவாக இவ்வளவே நான் நினைத்திருந்தது. நான் மட்டு மல்ல; உலகமுழுவதும் இப்படித்தான் நினைத்திருக்கக் கூடும். ஆனால் நடந்த விதமோ ஒருவருடைய புத்திக்கும் எட்டினதல்ல; ஸத்யகாமன் ஸத்யஸங்கல்பன் என்று பேர்படைத்த பகவான் எதையும் தான் ஸங்கல்பித்து நடத்துவதாகச் சொல்லுகிறார்களே, அவனுடைய ஸங்கல்பத்தையும் கடந்து நடந்ததாகவே ஒவ்வொருவரும் சொல்லிக்கொள்ளுகிறார்கள். உண்மையும் இதுவே. ஸூர்ய சந்திரர்கள் தோன்றினகாலம் முதல் இதுவரையில் ஒருவர்க்கும் இப்படி நடந்தது கிடையாதென்பதில் யார்க்கும் விவாதமிருக்காது. ஆனால், இப்படி நடத்துகிறமுறை ஒன்றுஉள்ளதென்று இப்போது கண்டறிய நேர்ந்து விட்டபடியால், மஹாதனிகர்களாயும் ஆஸ்திகர்களாயும் உள்ள மஹான்கள் இப்படிப்பட்ட விலக்ஷணரீதியில் தங்களுக்கோ தங்களைச் சார்ந்தவர்களுக்கோ மஹோத்ஸவத்தைச் செய்து அநுபவிக்க இனிஆசைப்படலாம். 'அண்ணங்கராசாரியர் ஸ்வாமி முப்பதினாயிரம் ரூபா செலவு செய்தால் நாம் அறுபதினாயிரம் செலவு செய்வோமே' என்று கூட சொல்லலாம். அறுபதினாயிரமென்ன? லக்ஷம் ரூபாய் கூட செலவு செய்யலாம். என்னசெய்தாலும் இப்படிப்பட்ட வாய்ப்பு ஓரிடத்திலும் ஒருவர்க்கும் ஒருநாளும் அமையாது. தேவேந்திரபவனம் போலே ஸ்வாமியின் திருமாளிகையமைப்பும், பாடசாலையும் ராமாநுஜகூடமும் நம்பிள்ளை ஸன்னிதியும் ஸ்வாமியின் திருவுள்ளம் போலவே விசாலமாக அமைந்திருக்கிற அழகும், காஞ்சீபுரியின் மாடவீதிகளின் வாய்ப்பும், உலகத்திலுள்ள ஸகல லௌகிக வைதிக வித்வான்களிடத்திலும் ஸ்வாமிக்கு ஆதியிலிருந்தே ஏற்பட்டிருக்கின்ற பக்ஷபாதமும், அவர்களெல்லார்க்கும் ஸ்வாமியிடத்தில் ஹ்ருதய பூர்ணமாக ஏற்பட்டிருக்கிற அநுராகமும், ஸ்வாமியின் திருவுள்ளம் கோணுதபடி நடந்து கொள்ளுகிற சிஷ்யர்களின் ஒத்துழைப்பும் அந்யத்ர ஸம்பவிக்க முடியுமா? இவற்றில் ஏகதேசமும் நெஞ்சால் நினைக்கவும் வேறொரு நபரிடத்தில் சிறிதும் அவகாசமில்லை யென்று சபதமிட்டுச் சொல்லுவேன். ஸ்வாமிபோலே மற்றொரு நபர் தேறமுடியுமானால் அவர்க்கும் இப்படிப்பட்ட மஹோத்ஸவம் நேரலாம். எத்தனை லக்ஷம் ரூபாய் செலவு செய்தாலும் இந்தபாக்கியும் இந்த ஏற்பாடும் இன்னொரிடத்திற்குக் கூடுமோ? கனவிலும் காண முடியாதென்பது திண்ணம். ஸ்வாமியின் லௌகிகவைதிக சாதுர்யங்களையும் திருவுள்ளத்தின் விசாலத்தையும் ஆச்சரியமான ஸௌஜந்யத்தையும் உலகம் கண்டு கொள்ளவே இம்மஹோத்ஸவம் அமைந்தது. காஞ்சீபுரியில் நடந்த வைதிக கோஷ்டிகளின் அதிசயங்கள்தான் வாசாமகோசரமா யிருந்ததென்றால் சென்னைமா நகரில் 5-நாள் நடந்த லௌகிக கோஷ்டியின் வைபவங்கள் நெஞ்சுக்கும் எட்டாதவையா யிருந்தன. லௌகிகத் தலைவர்களில் உயர்ந்தபதவிகளில் வாழுமவர்களும் ஒருங்கே கூடிப் பெரிய கோலாஹலமாகவும் கண்டவர்கள் பிரமிக்கும் படியும் நடத்திவைத்தார்களென்றால் இதுவெல்லாம் மனுஷ்யப்ரயத்னத்தினலாகக் கூடியதோ? ... *

(இந்த ஸ்ரீ முகம் 10 பக்கமுள்ளது. இவ்வளவே போதும்.)

## ஸ்ரீ ஸ்வாமியின் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவத்தில் உபஸ்திதர்களாயிருந்த வித்வான்கள் அத்தியாபகர்கள் ஸாமவேதிகள் யஜுர் வேதிகள் இதிஹாஸபுராண ஸ்ரீபாஷ்ய பகவத் விஷயதிகாரிகள் ஆகிய இவர்களின் திருநாமப்பட்டி.

### வித்வான்கள்

ஸ்ரீ: வானமாமலை கோபாலய்யங்கார்.
,, ,, தே. திருமலாசாரியர்.
,, ,, N S. சடகோபையங்கார்.
,, ,, வாத்யார் ஸ்ரீநிவாஸய்யங்கார்
திருக்குறுங்குடி. ஸ்ரீ. கிருஷ்ணய்யங்கார்
ஸ்ரீகாஞ்சி. இளங்காடு ரங்காசாரியார்.
,, அய்யா ஸ்ரீக்ருஷ்ணதாதாசாரியார்.
,, கருடபுரம் வரததேசிகாசாரியர்
திருநாங்கூர். ப்ர. அண்ணங்கராசாரியார்
,, ,, ஸ்ரீநிவாஸாசாரியார்.
அஹோபிலமடம் ஸ்ரீகார்யம். ஸ்வாமி
,, திருக்கள்ளம். நரஸிம்ஹராகவாசார்
,, புரிசை. கிருஷ்ணமாசாரியார்.
,, பெருக்காரணைசக்ரவர்த்திஜயங்கார்.
,, வில்லிவலம்கிருஷ்ணமாசாரியார்.
,, ப்ரஹ்மதேசம். ராமாநுஜாசாரியார்.
திருவையாறு, தி. ஈ. வீரராகவாசாரியார்.
திருக்குடந்தை ஸ்ரீநிவாஸ ராகவாசாரியர்.
நூஜிவீடு நடாதூர் சடகோபாசாரியார்
ஆசு கவி, வில்லூர் ஸ்ரீநிவாஸாசாரியார்
திருப்பதி T. K. கோபாலஸாமிதாதாசார்
,, கோழியாலம் சடகோபாசாரியார்
சென்னை. K. வரதாசாரியார்.
ஸ்ரீபெரும்பூதூர் ப்ரின்ஸிபால் சேஷாத்திரி ஐயங்கார்
,, நாவல்பாக்கம் க்ருஷ்ணதாதாசார்
,, ராம சந்திர சாஸ்த்ரிகள்.
,, ஸிம்ஹா சலம்ஸம்பத் குமாராசார்
சிட்டிகூடூர். கரிராமாநுஜாசாரியார்.
மயிலை. K. பாலஸுப்ரமண்ய சாஸ்திரிகள்.
கல்லிடைக் குறிச்சி ராமக்ருஷ்ணசாஸ்த்திரிகள்.
நெல்லூர். வெங்கட நரஸிம்மாசாரியார்
திரு நாகை. விஞ்சிமூர். தாதர்சாரியார்.
களத்தூர், வேங்கட தீக்ஷிதர்.
இளங்காடு. நிகமாந்தாசாரியார்.
பாலகவி ரகூத்தமாசார்.
ஆழ்வார்திருநகரி. ராமக்ருஷ்ணையங்கார்
மைஸூர்பரகாலமடம் வித்வான் தீக்ஷாசாரியார்
,, லக்ஷ்மணாசாரியார்.
கோயமுத்தூர் வேதவ்யாஸபட்டர்.
ஸ்ரீரங்கம் எம்பார் ராமாநுஜாசாரியார்.
,, மெ. ஸுந்தரராஜாசாரியார்.
மதுராந்தகம் வ. ரங்கநாதாசாரியர்

### அத்யாபகஸ்வாமிகள்.

### (காஞ்சீபுரம்.)

தேசூர். ரங்காசாரியர்.
பிள்ளைலோகம் திருவேங்கடாசாரியர்
தண்டிரி குமாரதாதாசாரியர்.
தி. ந. ச. திருவேங்கடாசாரியர்.
தி. த. ரங்காசாரியர்.
தி. அ. ஸ்ரீசைல கிருஷ்ணமாசாரியர்.
தி. அ. திருமலாசாரியர்.
திருமணி திருவேங்கடாசாரியர்.
கோயில், ப்ர. ராமாநுஜாசாரியர்.
கோ. க. அ. சிங்கராசாரியர்.
,, ,, ஸ்ரீநிவாஸாசாரியர்.
,, ,, ரங்கராஜாசாரியர்.
,, ,, வெங்கடாசாரியர்.
பிள்ளை லோகம் வரதாசாரியர்.
குமாண்டூர். ராஜகோபாலாசாரியர்.
ஒ. மு பாஷியமையங்கார்.
மடவளாகம் கோபாலாசாரியர்.
அகரம் பாஷ்யகாராசாரியர்.
,, ரங்கஸாமி ஐயங்கார்.
அஷ்டபுஜம் வெங்கடவரதாசாரியர்.
,, அனந்தாசாரியர்.
,, திருவேங்கட ராமாநுஜாசாரியர்
பரவஸ்து. திருவேங்கடாசாரியர்.
தி. வி. ராமாநுஜாசாரியர்
,, நரஸிம்ஹாசாரியர்,
வானமாமலைமடம். கிருஷ்ணமாசாரியர்
ப்ர. ரங்கநாதாசாரியர்.
கிடாம்பி. ஸ்ரீநிவாஸவரதாசாரியர்.
வா. பாஷியகாசாரியர்.
சாத்துப்படி வரதாசாரியர்.
உருப்புட்டூர் ஸ்ரீநிவாஸாசரியர்.
குவளை ரங்கஸாமி ஐயங்கார்.

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்.



1-4-51-சென்னை விழாக் கொண்டாட்ட முடிவு நாளில் வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு நினைவுமலர் அளிப்பது.

தி. த. ஸ்ரீநிவாஸாசாரியார்.
,, பாஷியகாசாரியார்.
,, வரதாசாரியார்.
பெரிய காஞ்சிபுரம் கிருஷ்ணமாசாரியார்

(ஸ்ரீ பெரும்பூதூர்)

கற்பூரம் பட்டப்பா வெங்கடா சாரியார்,
,, ஸ்ரீநிவாஸா சாரியார்.
மணவாள ராமாநுஜா சாரியார்.
" திருவேங்கடாசாரியார்
தி. கோ. ராமாநுஜாசாரியார்.
" ஸ்ரீநிவாஸாசாரியார்.

(டக்கன் ஹைதராபாத்)

அதிகாரி ஸ்ரீநிவாஸா சாரியார்.
,, தேவ நாயக மையங்கார்.
ஸஹபுரம். கிருஷ்ண மா சாரியார்.
பெங்களூர் கோமடம் ராகவாசாரியார்

(திருவல்லிக்கேணி)

அ. வீ. நரஸிம்ஹா சாரியார்.
அ. மு. ஸ்ரீ நிவாஸா சாரியார்.
காவல்கேணி அனந்தா சாரியார்.
ரங்கப்பய்யங்கார்.

(திருப்பதி)

தி. அ. கிருஷ்ணமா சாரியார்.
,, கோபாலா சாரியார்.
தி. யாமுநா சரியார்.
ப்ர. ரங்கஸாமி ஐயங்கார்
ப்ர. கோவிந்தாசாரி
பேரூர். ஸுந்தராசாரி.
ஜி. கிருஷ்ணய்யங்கார்.

(திருக்குறுங்குடி)

உடையவர் ஸன்னிதி குட்டி ஐயங்கார்.

(வானமாமலை)

தோதாத்ரி ஐயங்கார்.
T. சடகோபய்யங்கார்.
S. சடகோபா சாரி.
T. ராகவா சாரி.
T. ராமய்யங்கார்
ஆழ்வாரய்யங்கார்.

(ஆழ்வார் திரு நகரி)

ஆத்தான் போத்தி வேங்கடா சாரியார்.
,, ரங்காச்சாரி.
ஆ. திரு வேங்கடத் தையங்கார்.
எல்லெ. ராமையங்கார்.
வா ஆ. அண்ணு வைய்யங்கார்.

(ஸ்ரீ வில்லி புத்தூர்)

வின்ஜிமூர். கி. ஆழ்வார் ஸ்வாமி.
சின்ன அரையர் ஸ்வாமி.

(திருக் கோட்டியூர்)

ஸ்தானீகர். கோவிந்தய்யங்கார்.

(கோயில்—மதுரை)

வி. திருமலை ஐயங்கார்.
மல்லி. கோவிந்தய்யங்கார்.
மதுரை. சௌரி ஐயங்கார்.

(திருக்குடந்தை ப்ராந்தங்கள்)

இளைய வில்லி. தி. ஸ்ரீநிவாஸாசாரியார்.
ப. கண்ணனையங்கார்.
நாதன் கோயில் ஸாமி ஐயங்கார்,
திருச்சேறை. சௌரி ஐயங்கார்.
திருநகரி எம்பார் வெங்கடாசாரியர்
,, ,, வரதாசாரியர்
திருநாங்கூர்.எம்பார்.ஸ்ரீநிவாஸாசாரியார்
" ப்ர. ஸ்ரீநிவாஸா சாரியார்.

(காஞ்சீப்ராந்தங்கள்)

செங்கற்பட்டு பார்த்தஸாரதி ஐயங்கார்
திருவெவ்வுளூர் கோபாலாசாரியர்
,, ஸ்ரீநிவாஸாசாரியர்.
,, பழவேரிகிருஷ்ணமாசாரியர்
புரிசை பரவஸ்து பாஷ்யகாசாரியார்.
தாமல் ரங்கஸாமி ஐயங்கார்.
கடங்கரை ரங்கா சாரியர்.
மைலூர் வேங்கடாசாரியர்.
,, ஸ்ரீநிவாஸா சாரியர்.
,, அப்பனையங்கார்.
பாப்பூர். பேரவம். கிருஷ்ணமாசாரியர்
அரையப்பாக்கம் நரஸிம்மாசாரியர்.
பாராசூர் கண்ணன்.
இளநகர் துரைஸாமிஐயங்கார்.

(காழியூர்)

தட்டை கோபாலாசார்யர்.
,, பாஷ்யகாசாரியர்.
மன்னூர் பாஷியகாசாரியர்.
" மணவாளய்யங்கார்.
பெரிய நரஸிம்ஹா சாரியார்.
சின்ன நரசிம்ஹா சாரியார்.

(மாமண்டூர்)

பண்டித. ஸ்ரீரங்கா சாரியார்.
குப்புஸாமி ஐயங்கார்.
வாத்யார் திருவேங்கடாசார்.

## ஸாம வேதிகள்.

குளத்தூர் சக்ரவர்த்தி ஐயங்கார்.
" கோவிந்த ராஜய்யங்கார்.
,, வாஸுதேவாசாரியர்.
,, கிருஷ்ணஸம்பத்து ஐயங்கார்
,, கிருஷ்ணஸாமிஐயங்கார்.
வேலாமூர் ரங்கஸாமி ஐயங்கார்.
ஸ்ரீரங்கம் திருமலை ஐயங்கார்.
,, ஸ்ரீநிவாஸய்யங்கார்.
டெங்கணிகோட்டைசக்ரவர்த்திஐயங்கார்
அம்பி ராமமூர்த்தி சாஸ்திரிகள்.
,, ராமஸ்வாமிச்ரௌதி.
,, பரமேச தீக்ஷிதர்.
,, ஸ்வாமிநாத சாஸ்திரிகள்.
,, ஸாம்பசிவ சாஸ்திரிகள்.
,, ஸுப்ரமண்ய சாஸ்திரிகள்.
,, வேங்கடராமசாஸ்திரிகள்.
,, மஹாலிங்கம்.
" வேணு கோபால தீக்ஷிதர்.
" நாகேச்வர தீக்ஷிதர்.
" அவருடைய ப்ராதா.

## யஜுர் வேதிகள்

### (காஞ்சீபுரம்)

அகரம். வீ. ஸ்தல சாயி ஸ்வாமி.
தி. ஈ. சடகோபாசாரியார்.
தி. வி. சிங்கராசாரியார்.
மா. கு. நரஸிம்ஹா சாரியார்.
கோ. க. அ. ராமாநுஜாசாரியார்.
" ராகவாசாரியார்.
தி.அ. தொட்டயா சாரியார்.
மாம்பள்ளம் பாஷ்ய காராசாரியார்.
குளத்தூர் விஜயராகவாசாரியர்.
நல்வாய் ரகுநாதாசாரியார்.
பெரு. ஸுதர்சநதாதாசாரியர்
ஈச்சம்பாடிகஸ்தூரிஐயங்கார்
வில்லியம்பாக்கம் ஸம்பத்தாதாசாரியர்
மாமண்டூர் திருவேங்கடாசாரியர்
தண்டரி கிருஷ்ணஸாமிதாதாசாரியர்

### (ஸ்ரீபெரும்பூதூர்)

மணவாள ஸ்ரீநிவாஸாசாரியர்ஸ்வாமி.
திருநீர்மலை பார்த்த ஸாரதிஐயங்கார்
கற்பூரம் பாஷ்யகாசாரியர்
மடம் ராஜகோபாலாசாரியர்.

### (தென்தேசத்தவர்களும் அக்ரஹார தர்களும்)

திருக்கண்ணபுரம் கனபாடி சௌரி ஸ்வாமி
மதுரை சேஷாத்ரி ஐயங்கார்
,, மன்னூர் ராஜகோபாலாசாரியர்.
ஸ்ரீவில்லிபுத்தூர் அழகியசிங்கரா சாரியர்
ஸ்ரீரங்கம் அப்பண்ணையைங்கார்
மல்லி ராஜகோபாலாசாரியர்
தட்டை ஸுந்தர வரதாசார்
பனையூர் கண்ணனையங்கார்
பனையூர் சடகோபாசாரி
ஏத்தக்குடி ஸ்ரீநிவாஸாசாரியர்.
மன்னார்குடி கனபாடி நரஸிம்ஹாசாரியர்
நல்லூர் ஸுந்தரா சாரியர்.
திருக்கண்ணபுரம் ராகவாசாரியர்
கோஷ்டிபுரம் ராமாநுஜசாரியர்
புரிசை ராமாநுஜாசாரியர்.
நாவல்பாக்கம் தாததேசிகாசாரியர்.
" திருச்சேறை வரதாசாரியர்.
திருவல்லிக்கேணி மணவாளையங்கார்.
பாராகூர் கண்ணமாசாரியார்.
வேளிநல்லூர் கோபாலகிருஷ்ணமாசார்
நாட்டேரி ஸந்தான்மய்யங்கார்.
ஒழையூர் ரங்காசாரியார்.
கடமங்கலம் கோவிந்தாசாரியர்.
மாமண்டூர் ஸுந்தராசாரியர்.
ஆக்கூர் வீர ராகவாசாரியர்.
தரணி வரதவிஷ்ணுவாசாரியர்
ஏஜண்டு. ரங்காசாரியர்.
ஒழப்பாக்கம் துரைசாமிஐயங்கார்.
திரளி அம்பி கனபாடி

காஞ்சீபுரம் - P. B. A. ஸ்வாமியின் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம்.



1-4-1951 சென்னை விழாக் கொண்டாட்ட முடிவு நாளில் திவான்பஹதூர் K. S. ராமஸ்வாமி சாஸ்திரியாரவர்கள் ஸ்ரீ ஸ்வாமிக்குப் பண முடிப்பளித்தல்.

அனந்தேரி. ஸ்ரீநிவாஸாசாரியர்
மேல்பாக்கம் ராஜகோபாலாசாரியர்,
மைஸூர் கனபாடி பாண்டுரங்காசாரியர்.
தேரழுந்தூர் ஆமருவியாசாரியர்.
,, ஸ்ரீநிவாஸாசாரியர்.
குளத்தூர் கோபாலாசாரியர்.
அழகுசெய்யூர் கோபால கிருஷ்ணமாசார்.
விகட வேதம் விஜயராகவாசாரியர்.
காரி சாத்தான் சிங்கரா சாரியர்.
திருவாலி பார்த்தஸாரதிஐயங்கார்.
மலேயாங்குளம் ரங்கசாமி ஐயங்கார்.
புரசை வாக்கம் வாத்யார்.
சோழவரம் தட்டை, விஜயராகவாசார்
பே. ராமாநுஜாசாரியார்.
பழவேரி ராஜகோபாலாசாரியர்.
நாவல்பாக்கம் கிருஷ்ணமாசாரியர்.
புரிசை பட்டப்பா ஐயங்கார்.
,, ஸந்தானகோபாலன்,
திரளி பார்த்தசாரதி
நா, ராஜகோபாலையங்கார்
சிறுவித்யார்த்திகள் — 5,
கா. கோவிந்தாசாரியர்
K. சடகோபாசாரியர்
N. ராஜகோபாலாசாரியர்
மா. வரதாசாரியர்
பு. ஸ்ரீநிவாஸராகவாசார்
K. R. வரதகுட்டி ஐயங்கார்
ம. கிருஷ்ணஸாமி
கு. குப்பணையங்கார்
R. விஜயகுட்டி

**இதிஹாஸ புராணுதி அதிகாரிகள்**

தி. அ. பு. ராமாநுஜாசாரியார்.
திருநாராயணபுரம் தி.அ அனந்தாசாரிய
,, கோபாலாசாரியார்.
ஸ்ரீ பெரும்பூதூர் அனந்தபட்டர்.
,, ஆஸூரி வெங்கடாசாரியர்.
,, திருமலாசாரியர்.
,, வெ. கோபாலாசாரியர்.
,, க, ராமாநுஜாசாரியார்.
குன்ற பாக்கம் ராகவாசாரியர்.
பிள்ளை லோகம் பாஷ்யகாசார்ரியார்.
குணக்கரம் பாக்கம் ராகவாசாரியார்.
திருமழிசைஏகாங்கி.
அய்யா. நரஸிம்ஹதாதாசாரியார்.
எசனூர். நரஸிம்ஹாசாரியார்.
மலேயாங் குளம், கிருஷ்ணமாசாரியர்
கிடாம்பி.ஸ்ரீநிவாரஸாமாநுஜாசாரியர்.
,, ரங்கஸாமிஐயங்கார்
பரந்தூர் விஜயராகவாசார்

**அத்யாபக வேதபாராயண ஸ்வாமிகளின் திருநாமப் பட்டியில் எழுதப் பெற்றவர்கள் இவர்கள். எழுதப்பெருமல் விடுதியாய் வந்து கோஷ்டியில் அந்வயித்தவர் பலருண்டு.**

இப்படிக்கு,

**நல்லப்பா. ஜீயப்பங்கார் B. A.,**

ஸ்ரீ:

விக்ருதி ஞு. பங்குனி மீ 14 உ (27—3—51) ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநா
சார்ய உபய வேதாந்தாசார்யராய் எழுந்தருளி யிருக்கும் காஞ்சீபுரம் மஹாவித்வான்
ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தி மஹோத்ஸவத்தில்
பண்டித ஸுதர்சநாசாரியரால் ஸமர்ப்பிக்கப்பட்ட

# சொன்மாலை

சீர் மலி யுலகில் சிறப்பமைந் தோங்கும் ஏர் பெறு நாடுகள் யாவற் றுள்ளும்
தொண்டை நன்னாடு சான்றோருடைத்தெனப் பண்டைப்பிராட்டி பகர்ந்ததையறிவீர்
அந்த நன்னாட்டிற் கணியாய் விளங்கும் கலைஞர் வதியுங் கச்சிப் பதியினில்
அருமறை பயிலு மந்தணர் குலத்தில் பிரதிவாதி பயங்கர மெனும் பெருங்குடியில்
ஒரு சுடர் போல வுற்பவித் தருளிய மண்ணில் மலிபுக ழண்ணங் கராசார்ய!
நீர் சூழுலகில் நிறைந்துள மக்களுள் பேரும் புகழும் பெறுது பலப்பலர்
தோன்றலிற் றோன்றாமை நன்றெனச் சென்றனர் தோன்றிற் புகழொடு தோன்றுகே
னென்னத் தோன்றிய வொருவ! தொன்மை சால்றிவ!—
ஆழ்வா ரருந்தமிழமுத மருந்தும் வாழ்வே வாழ்வாய் மதிக்கு மனத்தோய்!
விசிட்டாத்துவைத மெய்ப்பொருள் விளக்கும் சதுட்டய நூல்கள்சழக்கறவுணர்ந்தோய்!
பைந்தமிழ் மொழியுடன் பகர் வடமொழியாம் இவ்விரு கவின் மொழியாகிய கடல்களில்
கலை நீர் முகந்து கேட்போர் வியக்கக் கன்னலும் விரை மலர்த் தேனும் கைத்திட
மலைவில் சொல் மழை வழங்குங் கொண்டால்! வடபா லிமயம் வயங்கு தென் சேது
இடையே யுள்ள விரும் புவிப் பரப்பில் எங்கணுஞ் சென்றே யிறை யருட் பிழம்பாம்
பொங்கொளி பரப்பிய புண்ணியப் பரிதீ மலர் தலை யுலகில் மன்னுயிர்க் குறுதி
பயக்குங் கேள்விப் பன்னூ லாய்ந்து முந்து முயற்சியால் முத்ரணம் செய்து
உலகம் இன்புற உவப்புடனளித்துப் புண்ணென விகழும் புலனிலாக் கண்களின்
புண்ணை யாற்றிப் புலமை தீற்றிக் கண்ணுள ரென்பர் கற்றோ ரென்றே
கண்ணைத் திறந்து கவின் பெற வைத்தாய்; உடல் பொருளாவியை யுவந்தே யளித்து
அரு மறைப் பள்ளியை யன்புடன் நிறுவினாய்; வரையறு நின்பணி வரையவும் படுமோ?
கைம்மாறு வேண்டாக் கடப்பாடுடைய மாரி மாட்டுலகு மாறென் செயு நின்
அறுபதா மாண்டு விழாவை மதித்தே இறும்பூதெய்தினம் இறும்பூ தெய்தினம்
ஒப்புமை யில்லா வுயர் சிறப் பெய்தி இணையறு பல்வகை யின்பமே
மல்கிட வரதனை வாழ்த்துவாமினியே.

—:O:—

அவளூர்

K. ஸுதர்சநாசார்யர் (மாம்பலம்)
(ரிடயர்ட் தமிழாசிரியர்)

# அருளிச்செயல் ஸேவாக்ரமங்கள்

(P. B. A. ஸ்வாமி)

திவ்யப்பிரபந்தங்களை இயல் ஸேவிக்கும் காலத்தில் ஒரு விதமான நிபந்தனையில்லாமல் அவரவர்களுக்குத் தோன்றினவாறு நிறுத்துவதைப் பெரும்பாலும் எங்கும் காணுகின்றோம். அடியடியாக நிறுத்தவேண்டியிருக்க, அங்ஙனம் நிறுத்தாமல் முதலடியின் சில சொற்களை இரண்டாமடியோடு கூட்டுவது, அவ்வடியின் சொற்களை மேலடியோடு கூட்டுவது, என்றிப்படி காணும் ப்ரகாரங்கள் எக்காலத்தில் யாரால் எதற்காக ஏற்படுத்தப்பட்டவை? பாராயணம் பண்ணும்போது அர்த்தாநுஸந்தானத்திற்கு ப்ரஸக்தி யில்லாமையால் அர்த்தத்தில் நோக்காகப் பாதங்களை ஒடிப்பது எதற்காக? ஸம்ஸ்க்ருத வேத பாராயணத்திலாவது ஸ்தோத்திர பாடங்களிலாவது இப்படிப்பட்ட ஏற்பாடுகள் இல்லையே. திவ்யப்பிரபந்தங்களுக்கு மாத்திரம் எதற்காக ஏற்பட்டது? ஏற்பட்டாலும் எல்லாவிடங்களிலும் எல்லார்க்கும் வேற்றுமையின்றி ஒரேவிதமான ஏற்பாடு இருந்திடக்கூடாதா? நான்கு திருநாமங்கள் சேர்ந்து ஸேவித்தால் நால்வரும் நான்கு விதமாக நிறுத்தும்படியாய்ப் பலவிடங்கள் காண நேர்கின்றதே; இதென்ன? என்று சில பெரியார்கள் சர்ச்சிப்பதுண்டு. இதைப்பற்றிச் சிறிது விமர்சிக்க விரும்புகிறோம்.

வடமொழி வேதத்தில் ஸம்ஹிதை பதம் க்ரமம் என்கிற ரீதிகள் ஒருவிதமாக நடந்து வருகின்றன. அர்த்தாநுஸந்தான ப்ரஸக்தி அணுமாத்ரமும் அதில் இல்லாமையினால் நிறுத்த வேண்டுமிடங்கள் கல்பிக்கவேண்டிய அவசியம் அதில் இல்லையாயிற்று. ஸ்தோத்ரபாடங்களுக்கு ஸந்நிதிகளில் நியதப்ரசாரமுமில்லை, விசேஷ ப்ரசாரமுமில்லை. சில ஸ்தோத்ரங்களைச் சில காலங்களில் அநுஸந்திப்பதென்றிருந்தாலும் பாதம் பாதமாக நிறுத்தி ஸேவிப்பதென்கிற ப்ரக்ரியையின்றிக்கே பூர்வார்த்தம் ஒரு மூச்சாகவும் உத்தரார்த்தம் ஒரு மூச்சாகவும் ஸேவிக்கிற ப்ரகாரமே காண்கிறது.

அர்ச்சாவதார வேதமான திவ்யப் பிரபந்தங்களை எம்பெருமான் திருவுள்ளமுகக்குமாறு செவிக்கினிய செஞ்சொல்லாக ஸேவிக்க வேணுமென்கிற திருவுள்ளத்தோடு பூர்வர்கள் ஏற்பாடு செய்த காலத்தில் அர்த்தச் சேர்த்தியை நோக்கி நிறுத்துமிடங்களை ஒருவாறு ஏற்பாடு செய்தருளினார்கள். மேலெழ நோக்குமிடத்தில் சிலசில இடங்களில் அவர்களுடைய ஏற்பாடு அநுகுணமல்லாதது போல் தோன்றவுங் கூடும். நிரூபித்துப் பார்த்தால் அதுவே ரஸவத்தரமாக இருக்கும். இதற்காக இரண்டொரு இடம் எடுத்துக் காட்டுகிறேன்.

திருப்பல்லாண்டில் *வாழாட் பட்டு* என்கிற பாசுரத்தில் "இராக்கதர்வாழ்" என்று நிறுத்திவிட்டு "இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்கு" என்று ஸேவித்துவருவது எங்கும் ஏகரீதியாகக் காண்கிறது. இங்கு "இராக்கதர் வாழிலங்கை" என்னுமளவும் ஒரு அடியாயிருக்க இதை உடைப்பானேன்? இராக்கதர் வாழ் என்கிற விசேஷணம் இலங்கையில் தானே அந்வயிக்கவுரியது. அந்த விசேஷணத்தைத் தனியே நிறுத்திவிட்டு "இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்கு" என்று ஸேவித்துவிட்டால் 'வாழ்' என்பது எங்கே அந்வயிக்கும். அந்தரத்திலன்றோ நிற்க வேண்டியதாகிறது. இப்படியன்றிக்கே (வாழிலங்கை) என்கிற வரையில் நிறுத்தினால் அந்வயக்ரமம் பொருந்துவதோடு அநாவச்யகமாக அடியை உடைக்காமையும் தேறுகின்றது—என்று நவீன நிரூபகர்கள் நினைக்கக் கூடும்.

வாழ் என்பது இலங்கையில் அந்வயிக்கச்கூடியதென்று சிறுவர்க்கும் தெரியக்கூடிய விஷயமாதலால் முன்னோர்கள் இதையறிந்தும் உடைத்து ஸேவிக்கும்படி நியமித்ததன் கருத்து என்னவென்றால், கேண்மின்; 'இலங்கை பாழாளாகப் படை பொருதானுக்கு' என்று ஸேவித்தால் எம்பெருமானுடைய ஒரு திருநாமம் பூர்த்தியாய்ச் சொல்லப்பட்டதாகின்றது: இங்ஙனன்றிக்கே (பாழாளாகப் படை பொருதானுக்கு) என்றால் சுவையில்லையாகிறது.

இன்னமும் ஓரிடம் எடுத்துக் கொள்வோம்; திருப்பல்லாண்டிலேயே *எந்நாளெம் பெருமான்—உன்தனக்கடியோ மென்றெழுத்துப்பட்ட வந்நாளே" என்று ஸேவிப்பதை எங்கும் ஏகரீதியாகக் காண்கிறோம். இங்கு இரண்டாமடியின் முதற்சொல்லாகிய (அந்நாளே) என்பதை முதலடியோடு சேர்த்து ஸேவிக்க வேண்டிய அவசியம் இல்லை; எம்பெருமானே! உன்தனக்கு அடியோமென்று எழுத்துப்பட்ட நாள் எந்நாளோ) என்பது ஒரு வாக்யார்த்தமாக நிற்கிறது; (அந்நாளே அடியோங்க ளடிக்குடில் வீடு பெற்றுய்ந்தது காண்) என்பது அடுத்ததொரு வாக்யார்த்தமாக நிற்கிறது. ஆகவே, அந்நாளே யென்பதை முதலடியோடு கூட்டி ஸேவிக்க வேண்டுவானேன்? என்று க்ஷேபிக்கக்கூடும். இங்கு முன்னோர்களின் திருவுள்ள மென்ன வென்றால், அந்நாளே யென்பது முன்னடியோடு ஏகச்வாஸமாகவே உச்சரிக்கப்படவேண்டும்; இடையில் மூச்சுவிட்டால் ரஸபங்கமேயாகும். உன்தனக்கு அடியோமென்று எழுத்துப்பட்ட அந்த நாளிலேயே நாங்கள் ஸகுடும்பமாக உஜ்ஜீவிக்கப் பெற்றோமென்பது இங்கு விவக்ஷிதமாதலால் (எழுத்துப்பட்ட வந்நாளே) என்னுமளவும் ஒரு வாக்யார்த்தமாக இருப்பதில் சுவை மிகுதியுண்டு என்று திருவுள்ளம் பற்றினார்கள் பூருவர்கள்.

இங்ஙனே பல விடங்களிலும் ஆராய்ந்து பார்க்கையில் நிறுத்துமிடங்களின் வ்யவஸ்தை பூருவர்களே செய்ததென்றும், அதுவும் ஆழ்ந்த ஆராய்ச்சியுடன் செய்யப்பட்டிருக்கிற தென்றும் சொல்லும்படியாகவுள்ளது. ஆனால் முன்னோர்கள் ஏற்படுத்தின வளவோடு நில்லாமல் காலக்ரமத்தில் அவரவர்கள் தம்தமக்குத் தோன்றினவாறெல்லாம் நிறுத்தவும் ஒடிக்கவும் இடமுண்டாய்விட்டது.

திருச்சந்த விருத்தத்தில் *கேடில் சீர்வரத்தன்* என்கிற பாசுரத்தில் இரண்டாமடி "நாடினோடு நாட்டமாயிரத்தனோடு நண்ணினும்" என்பது. இங்கு 'நாட்டமாயிரத்தன்' என்பது முழுச்சொல். நாட்டமென்று கண்ணுக்குப் பெயர்; நாட்டமாயிரத்தனென்று ஸஹஸ்ராக்ஷன் இந்திரனைச் சொல்லுகிறது. நாட்டமாயிரத்தன் நாடு நண்ணினும்—இந்திரலோகத்தைச் சேர்ந்தாலும் என்று பொருள். இவ்விடத்தில் விவேகிகளோடு அவிவேகிகளோடு வாசியறப் பெரும்பாலும் எப்படி நிறுத்துகிறார்களென்றால், "நாடினோடு நாட்டமாய்—இரத்தனோடு நண்ணினும்" என்று ஸேவித்து வருகிறார்கள். சில மஹான்கள் யதாக்ரமமாக ஸேவிப்பது முண்டு; அது ஸ்வல்பம். பெரும்பான்மையாக விபரீதமாய் ஸேவித்து வருகிறார்கள். ஒரு திவ்ய தேசத்தில் பத்திருபது ஸ்வாமிகள் இப்படியே ஏகரீதியாக ஸேவித்ததைக் கேட்ட ஒரு மஹநீயர் வருந்தி ஸாதித்தாராம்—'இரத்தநாடு' என்று சொல்லுவதைவிட 'உரத்தநாடு' என்று சொன்னால் ஒரு ஊரின் பேரையாவது சொன்னதாக இருக்குமே என்றாராம். அவருடைய பரிதாபத்தை என் சொல்வோம்!.

இவ்விதம் அஸம்பத்தமாக வொடித்து நிறுத்துமிடங்கள் பலவுண்டு. அவற்றுக் கெல்லாமாக இஃதொன்று எடுத்துக் காட்டினபடி: இத்தகைய அஸந்தர்ப்பங்களைத் திருத்துவதென்றால் அது மிகவும் கடினமான காரியமேயாகும், 'அநாதி ஸம்ப்ரதாயத்தைப் பாழ்படுத்த வந்து விட்டானிவன்' என்கிற தூஷணைக்கே இடமேற்படும், "ஸங்கே சக்தி: கலௌ யுகே"

என்றபடி பெருந் திரளாகச் சேர்ந்து ஒரு விதமாக ஸேவித்துவிட்டால் அதற்கே ப்ராபல்யம் ஏற்பட்டு விடுமாதலால் அவ்விடங்களில் சிக்ஷிப்பவர்கள் பரிஹாஸ்யராவார்கள். பிறரை சிக்ஷிக்க அஞ்சினாலும் விவேகிகளாயிருப்பவர்கள் தாங்கள் ஸேவிப்பதை அஸம்பத்தமாக ஸேவிக்கமாட்டாமல் சொற்சுவைக்கும் பொருட் சுவைக்கும் பொருத்தமாகவே ஸேவிக்க விரும்புவர்களாதலால் அப்படி ஸேவிக்கும்போது இவர்கள் ஒரு பக்கம் இழுப்பதாகவும் பிறர் மற்றொருபக்கம் இழுப்பதாகவும் காண நேர்ந்துவிடுகிறது. மற்றவர்களும் விவேகிகளாக ஆகும் வரையில் இப்படிப்பட்ட கஷ்டங்கள் அபரிஹார்யமேயாம்.

திவ்யப்ரபந்தம் தமிழ்ப் பாஷையில் அமைந்திருப்பதாலும், 'தமிழ் பாஷை நமக்குச் சொந்தமானதுதானே' என்று ஒவ்வொருவரும் நினைக்கும்படியாயிருப்பதாலும் சிறிது வாயைத்திறக்க யோக்யதை யுடையா ரெல்லாருமே பகவத் விஷயாதிகாரிகளாகக் கருதப் படுகின்றனர். அன்னவர்களால் திவ்யப்ரபந்தங்களுக்கு ஏற்படும் கோளாறுகள் அபாரம். பெரியாழ்வார் திருமொழியில் "சென்னியோங்கில் "நின்னுள்ளேனாய்ப் பெற்ற நன்மை இவ் வுலகினில்ஆர்பெறுவார் " என்கிற அடிக்கு அர்த்தம் தெரிந்துகொள்ள ஒருவருக்கு விருப்ப முண்டாயிற்று. அவர் பகவத் விஷயாதிகாரியென்று ப்ரஸித்தரான ஒரு ஸ்வாமியிடஞ் சென்று இந்த ஸ்ரீஸூக்திக்குப் பொருள் ஸாதிக்க வேணுமென்று கேட்டார். "நின்னுள் ளேனாய்" என்பதற்கு அவர்க்குப் பொருள் விளங்கவில்லை, கேட்டவர்க்கும் அவ்விடத்தில் தான் ஜிஜ்ஞாஸை. ஒருவர் கேட்கும்போது 'எனக்கும் தெரியவில்லை' என்று சொல்லிவிட் டால் அகௌரவமாய்விடும் என்று பண்டிதம்மந்யர்கள் பெரும்பாலும் நினைக்கிற வழக்க மாதலால் அவரும் அப்படியே நினைத்து ஏதாவது ஒரு விதமாக இவர்க்குப் பொருள் சொல்லி விட வேணுமென்றே நினைத்து "நின்னுள்ளே, நாய்பெற்ற நன்மை இவ்வுலகினிலார் பெறு வார்?" என்று பதவிபாகம்பண்ணி நிர்வஹித்தார். ஒருநாள் ஸ்ரீரங்கநாதனுடைய கர்ப்ப க்ருஹத்தினுள்ளே ஒரு நாய் புகுந்து விட்டது; அந்த ஐதிஹ்யத்தை இங்கே யருளிச்செய்கி றார் பெரியாழ்வார். கடைகெட்ட நாய் கூட உன் திருவடியருகே வரும்படியான பாக்கியம் பெற்றுவிட்டது !, அந்த பாக்யத்தை இவ்வுலகினில் வேறு யார் பெறுவார்? என்பதாக அர்த் தம் நிர்வஹித்து விட்டார். "அஸங்க்ருஷ்டஸ்ய நிக்ருஷ்டஜந்தோ: மித்யாபவாதேந கரோஷி சாந்திம்" என்ற பட்டர் முக்தகத்தின் பொருளை அவர் கேட்டிருந்தார் போலும்; அந்த அர்த் தத்தை இந்தப்பாசுரத்தில் ஏறிட்டு அட்டஹாஸமாய்ச் சொல்லி விட்டார். "ஐதிஹ்யமறி யாதவர்கள் வேறுவிதமாகவும் இதற்குப் பொருள் சொல்லக்கூடும், அதுவெல்லாம் பொருளே யன்று இதுவே ஸம்ப்ரதாயார்த்தம்" என்றும் சொல்லிவிட்டார்.

உண்மையில் இவ்விடத்தில் நாயுமில்லை பேயுமில்லை, 'நின்னுள்ளேன் ஆய் பெற்ற நன்மை'—அடியேன் உன்னிடத்தில் அந்வயித்தவனாகிப் பெற்ற நன்மையை இவ்வுலகினில் வேறு யார் பெறுவார் ? என்பது இவ்விடத்திலுள்ள தாற்பரியம்.

ஆபாதப்ரதீதியில் தோன்றுகின்ற பொருளைக்கொண்டு அவரவர்கள் அருளிச் செயல் களில் அநர்த்தம் செய்கிறபடிகள் ஒன்றிரண்டல்ல; பன்னியுரைக்குங்கால் பாரதமாம். இப் படிப்பட்ட ஸ்வாமிகள் சிலர் நிர்வாஹகர்களாயிருந்த காலத்தில் அருளிச்செயல் ஸேவிக் கும் க்ரமங்களில் சில ஏற்பாடுகளை மனம்போனபடி யெல்லாம் செய்திருக்கிறார்களென்று அடியேனுடைய அபிப்ராயம். பெரிய திருமொழியில் (6-3-8) "முளிந்தீந்த வெங்கடத்து" என்பது ஒரு பாசுரம். பாலைநிலத்திற்கு [அதாவது மருகாந்தாரத்திற்கு] வெங்கடமென்று பெயர். இதைச் சிலர் வேங்கடமென்று ஓதவும், அவ்விடத்தில் கைகூப்பவும் ஆரம்பித்துவிட்

டார்கள். திருவேங்கடமலையை மங்களாசாஸநம் செய்கிற பாசுரமிது என்கிற ப்ரதீதி உண்டாய்விட்டது. எந்தக்காலத்திலோ திருமலையில் இப்பாசுரத்தை இயலில் இரட்டித்து ஸேவிப்பதென்கிற ஸம்பிரதாயம் புகுந்து விட்டது. வெகுகாலம் அப்படி நடந்து வந்ததாம். முப்பது ஸம்வத்ஸரங்களுக்கு முன்பு அவ்விடத்தில் சின்ன ஜீயராக எழுந்தருளியிருந்த ஆழ்வார் திருநகரி பக்ஷிராஜையங்கார் ஸ்வாமி யென்பவர் சிறந்த விவேகியாகையாலே அவர் வெகு ப்ரயாஸப்பட்டு இந்தத்தீய வழக்கத்தை நிறுத்தியருளினாரென்பதை அடியேன் நேரில் அறிவேன். திருவேங்கடமுடையானுடைய ப்ரஹ்மோத்ஸவ பொன்றில் திருத்தேரினன்று இயலில் இப்பாசுரம் ஸேவையாகிறது. எல்லாரும் "முளிந்தீந்த வேங்கடத்து" என்று ஓங்கி ஸேவிப்பதும் அஞ்ஜலி செய்வதும் இரட்டிப்பதுமாயிருக்கிறார்கள். மேற்சொன்ன சின்னஜீயர்ஸ்வாமி எழுந்து "இதென்ன அநியாயம்! கேள்வி முறையில்லையா?" என்று கோஷித்தார். விசிறியாலே சிலரைப் புடைக்கவும் புடைத்தார். அந்த ஸமயம் அந்த ஸ்வாமியின் வார்த்தை வீறு பெறவேயில்லை. எல்லாரும் இரட்டித்தே ஸேவித்துப் போந்தார்கள். பிறகு வெகு சிரமப்பட்டு விஷயமுணர்த்தி நிறுத்திவைத்தார்.

இங்ஙனே திருத்தவேண்டிய அவத்யங்கள் நூற்றுக்கணக்காக நேர்ந்திருக்கின்றன. ஞாபகத்திற்கு வருகின்ற மற்றொரு அதிசயமும் அறைகின்றேன். பெரியாழ்வார் திருமொழியில் "புழையிலவாகாதே நின் செவி புகர்மாமதீ" என்பது ஒரு பாசுரம். இவ்விடத்தில் பலரும் "நின் செவீ" என்று அநாவச்யமாக நீட்டி ஸேவிப்பதுண்டு. ஸ்ரீபெரும்பூதூரெம்பெருமானார் ஸன்னிதியில் ஒரு திருநாளில் கோஷ்டியிலிருந்து ஸேவிக்க நேர்ந்தபோது அடியேன் பக்கத்திலிருந்து ஸேவித்தவர், பலரும் ஸேவிக்கிற வழக்கப்படியே 'நின் செவீ' என்று நீட்டியே ஸேவித்தார். அவர் வாசித்து விவேகியாயுமிருந்தபடியாலே 'செவீ' என்று நீட்ட வேண்டுவது அவசியமோ?' என்று அவரைக் கேட்டேன்; 'எனக்கு ஸந்தையானபடியே நான் சொல்லுகிறேன், அவ்வளவே எனக்குத் தெரியும்' என்றாரவர். 'ஆனாலும் தேவரீருடைய விவேக சக்தியைச் சிறிது உபயோகித்துப் பார்க்கலாமே' என்றேன். செவி என்று காதுக்குப் பேராகையாலே நீட்டல் வேண்டாமென்று தோன்றுகிறது என்றார். இந்த சர்ச்சையை அவருடைய ஆசார்யரொருவர் குறிக்கொண்டிருந்து, என்ன சர்ச்சை நடந்ததென்று பிறகு அவரைக் கேட்டார். செவீ என்கிற நீட்டலைப் பற்றின சர்ச்சை என்று, நடந்த விஷயத்தைச் சொன்னாரவர். அதற்கு அந்தப் பெரியார் சொன்னாராம்—அவனொரு பித்தன், நீ ஒரு பேயன்; காது ஒன்றுதானா இருக்கும், இரண்டல்லவோ காதுகள்; ஒரு செவியானால் 'செவி' என்றே சொல்லத்தகும்; இரண்டாகையாலே செவீ என்ன வேண்டாவோ? 'ஹரி சப்தங்கூட அறியாதவன் ஒன்று சொல்லுவதும் அதை நீ ஆமோதிப்பதும் நன்றாயிருக்கிறது! என்றாராம். வடமொழியில் ஹரி: ஹரீ ஹரய: என்கிறாப்போலே தென்மொழியில் செவி: செவீ செவய: என்று அந்த ஸ்வாமி சப்தமஞ்சரி கற்பித்து விட்டார். அவர் ஸாமான்யரல்லர். ஆசார்ய பதவீ நிர்வாஹகர். விநோதமாகச் சொன்னாருமல்லர், உண்மையாகவே அப்படி க்ரஹித்துச் சொன்னவர்.

இவ்வண்ணமாக அடியேனுடைய அநுபவத்தில் நேர்ந்த இதிஹாஸங்களை யெழுதுவதானால் ஒரு பெரிய புத்தகமாகும். இப்படியாக நேர்ந்திருக்கிற பிறழ்வுகளைத் திருத்த ஆராலும் முடியாது. தமிழிலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுணர்ந்து திவ்ய ப்ரபந்த வியாக்யானங்களையும் பலகால் ஸேவித்து நிரூபண நைபுண்யமும் பெற்றிருக்கின்ற மஹான்கள் ஆங்காங்கு இல்லாமற் போகவில்லை. அப்படிப்பட்டவர்கள் ஸேவிக்கும் முறைமைகள் மிகத் திருத்தம் பெற்றேயிருக்கும் என்று உகந்திருக்க ப்ராப்தம்.

* யதார்த்தவாதீ பஹுஜநத்வேஷீ* என்கிற பழமொழி நமக்கு நன்கு தெரிந்திருக்கச் செய்தேயும் நெஞ்சினுள்ளுறையும் விஷயங்களை பஹுஜந கோபத்திற்கு அஞ்சி வெளியிடாமலிருக்கும் வழக்கமில்லை. மிக அவசிய மென்றும் உசிதமென்றும் நமக்குத் தோன்றுகிற ப்ரக்ருத விஷயங்களை வெளியிட்டு வைத்தால் இது அடியோடு நிஷ்பலமாய்விடாது கால விசேஷத்தில் அதிகாரி விசேஷங்களிலாவது ஸபலமாகு மென்கிற நம்பிக்கை யிருப்பதனால் வெளியிடலாகிறது.

ஸம்ஸ்க்ருத வேதத்தோடு ஸாம்யத்தையும் அதிற்காட்டிலும் ஆதிக்யத்தையும் திவ்ய ப்ரபந்தங்களுக்கு நம் பூருவர்கள் நிரூபித்தருளியுள்ளார்கள். "உதாத்தாதிபதக்ரம........செய் கோலமிதுக்குமுண்டு" என்கிற ஆசார்யஹ்ருதய சூர்ணிகையான்து வேதத்திற்குள்ள லக்ஷணங்களெல்லாம் திவ்ய ப்ரபந்தத்திற்குமுண்டென்று மூதலிக்கிறது. அந்த வடமொழி வேதத்தின் அக்ஷரங்களை வைதிகர்கள் உச்சரிக்கும்போது எவ்வளவோ அவதானத்துடனும் பயத்துடனும் உச்சரித்து வருகிறார்கள். ஒரு மாத்திரை பிசகாகச் சொல்லிவிட்டாலும் மஹா பாதகமுண்டென்று அஞ்சுகிறார்கள். அக்ஷரங்களை உச்சரிப்பதிலும் வெருகட்டுப்பாடு ஏற்பட்டுள்ளது. வேத மோதினவர்களையெல்லாம் வேதாத்யாயிகளாக ஒப்புக்கொள்ளமாட்டார்கள் பெரியோர்கள். ஆநுபூர்வி தப்பாமல் சொல்லுவது, அக்ஷரம் ஸ்வரம் மாத்திரை முதலானவற்றில் வழுவில்லாமல் சொல்லுவது என்கிற இவை தவிர, அக்ஷரங்களின் உச்சாரணக்ரமம் என்பது தனிப்பட்ட வொரு பெரிய விஷயம். அதை உள்ளபடி தெரிந்துகொள்வதற்குப் பல்காலம் குருகுலவாஸம் செய்யவேண்டும். அதற்கென்று அனேக க்ரந்தங்கள் தோன்றியுள்ளன. அதில் சிறிதும் ஆராய்ச்சி செலுத்தாமல் ஏதோ வேதாநுபூர்வியைச் சொல்லிக்கொண்டு போகிறவர்களே எங்குமுள்ளார்கள்.

திவ்ய ப்ரபந்தங்களுக்கு அப்படிப்பட்ட லக்ஷணநூல் ஒன்றும் ஏற்பட்டிருக்கவில்லை. ஆனாலும், விவேகிகளான பெரியார்களிடத்தில் பழகியே தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் பலபல. அச்சுக்கூடங்கள் ஏற்பட்டு திவ்யப்ரபந்தங்கள் அச்சேறினபின்பு அருளிச் செயல்களை குருமுகமாக க்ரஹிப்பவர்கள் மிகச் சிலரேயாயினர். அச்சிட்ட நாலாயிரப்பதிப்புகள் பெரும்பாலும் சொற்பிழை எழுத்துப்பிழை யில்லாமலே யிருக்கின்றன. அப்படி யிருந்தும் புஸ்தகபாட முள்ளவர்களும் புத்தகத்திலுள்ள எழுத்துக்களை முற்றுநோக்கி அபசப்தம் புகாதபடி ஓதித் தரித்திருப்பவர்கள் ஆயிரத்தில் ஒருவரிருவரே தேறக்கூடும். "திருப்பல்லாண்டு ஒன்றை மாத்திரம் சொற்பிழை யெழுத்துப்பிழை சிறிதுமில்லாமல் ஒருவர் சொல்லிவிட்டால் அவர் திருவடிகளே தஞ்சமென் றிருப்பேனடியேன்" என்று அடியேன் ஒரு ஸமயம் ஒரு கோஷ்டியில் விஜ்ஞாபிக்க நேர்ந்தது. அது கேட்டுப் பலர் சீறிவிழுந்தார்கள். உலகமெல்லாஞ் சீறினாலும் அதுபற்றி அடியேனுக்குக் கவலையில்லை. விவக்ஷிதங்களான விஷயங்கள் வெளிவந்தே தீரவேண்டுமன்றோ.

பல்லாண்டு என்பதை 'பெல்லாண்டு' என்று உச்சரித்தல்; 'பிரிவின்றியாயிரம்' என்று விட்டுப் பிரவன்றி என்று உச்சரித்தல்; "படைபோர்" என்பதைப் 'படபோர்' என்பது; 'வாழாட்பட்டு' என்பதை 'வாழ்ால்பட்டு' என்பது; 'எங்கள் குழுவினில்' என்பதை 'எங்கள் குழ்வினில்' என்பது; 'புகுதலொட்டோம்' என்பதை 'புகுதலிட்டோம்' என்பது; 'ஏழாட்காலும்' என்பதை 'காலம்' என்பது; 'இராக்கதர்வாழ்' என்பதை 'இராக்கதிர்வாழ்' என்பது; 'வரம்பொழி' என்பதை 'வரம்பொழில்' என்பது; "உடுத்துக் களைந்த........ கலத்த துண்டு" என்பது, "உன்தனுக்கு" என்பது, "அணிகோட்டுயர் கோன்" என்பது...... இப்படிப்பட்ட

ஸேவைகள் எவ்வூரிலும் ஒரேவிதமாகக் காதில் விழுவதுண்டு. ஆனால் ஸேவிக்கவேண்டிய முறைப்படி ஸேவிப்பவர்கள் எங்குமே யில்லையென்று நாம் சொல்லவில்லை. பிழையில்லாம லும் பரமபோக்யமாகவும் ஸேவிப்பவர்கள் ஆங்காங்கு ஒருவரிருவர் எழுந்தருளியேயுள்ளார் கள். பெரும்பான்மையாக நமது காதில் விழும் அபசப்தங்களானவை நன்றாக ஸேவிப்பவர் களையும் மறக்கச்செய்துவிடுகின்றன.

திருப்பாவை சாத்துமுறை நாடோறும் ஒவ்வொரு திருமாளிகையிலு முள்ளது. அந்த இரண்டு பாசுரங்களையாவது பிழையில்லாமல் ஸேவிப்பவர்களுண்டா? "பெத்தம்மேல் துண்ணும் குலத்தில் பிறந்து" "ஏழ்ழு பரவைக்கும்" "மைத்துனன் காமங்கள் மாற்று". "பறைகொண்ட வார்த்தை" "பைங்கமலத் தண்டரையில்" "சங்கத்திருமாலால் எங்கும் திரு வருள் பத்தி" "இன்பறவரொம்பாவாய்" என்றிப்படியெல்லாம் வாய்வந்தபடி சொல்லுமவர் எங்கும் மலிந்துள்ளார்கள். "பட்டர் பிரான்" என்பதை "பட்ட்ற பிரான்" என்பது, "விட்டு சித்தன்" என்பதை "விஷ்ணுசித்தன்" என்பது........ ஆக இப்படிப்பட்ட பிழைகளும் அபாரம். விஷ்ணு சித்தன் என்பதுதானே சொல்வடிவம்; அதை அப்படியே சொன்னால் என்ன பிழை? என்று ஆக்ஷேபிப்பாருமுளர். விஷ்ணுசித்தன் என்பது வடசொல் வடிவமானாலும் தமிழ்ப் பிரபந்தங்களில் வழங்கும் சொல்வடிவம் அதுவல்ல; விட்டுசித்தன் என்பதுதான் தமிழ்ச் சொல். முக்தி, பக்தி முதலிய வடசொற்கள் தமிழில் முத்தியென்றும் பத்தியென்றும் மாறு நின்றன. தமிழ்ப் பிரபந்தங்கள் ஸேவிக்கும்போது முக்தியென்றும் பக்தியென்றும் உச்சரிப் பதில்லை. அப்படி உச்சரித்தால் அது பிழையே யாகும். இதுபோலவே விஷ்ணுசித்தன் என்பதும் விட்ணு சித்தன் என்பதும் தவறேயாகும். இப்படிப்பட்ட சொல்தவறுகளையும் எழுத்துத் தவறுகளையும் நாம் எடுத்துக்காட்டப்புகுந்தால் ஓரளவில் அடங்காது. ஆங்காங்கு திவ்யப்ரபந்தங்கள் ஸேவிப்பவர்களை தினப்படியாக யாவரும் காணமுடியுமாதலால் இங்கே நாம் எடுத்துக்காட்டிய விஷயங்கள் அனைவர்க்கும் பிரதியக்ஷமாகக் கூடியவையே. இந்த வியாஸத்தை அவரவர்கள் வாசித்துப்பார்க்கும்போது இனி இப்பிழைகள் புகாதபடி ஸேவிக்க வேணுமென்று ஆசை கொள்வர்கள்; ஆனால் அநாதிவாஸனை எறிக்கிடப்பதனால் பாசி படர் வதுபோல் பழைய தப்புப்பாடங்களே தலைகாட்டித்தீரும்.

நல்ல விவேகியான ஒரு ஸ்வாமி திருப்பாவையில் *நாயகனாய்ப் பாசுரத்தில் "ஆயர் சிறு மயிரோ உமக்கு" என்றே ஸேவித்து வந்தார்; அடியேனும் தாங்க முடியாமல் ஒரு நாள் அவரை யழைத்து "அப்படிச் சொல்ல வேண்டாம்; ஆயர் சிறுமியரோமுக்கு என்னவேணும்' என்று சொல்லி அச் சொல்லின் ஸ்வரூபத்தையும் பொருளையும் விவரித்தேன். அதுகேட்டு அவர் 'நாற்பது வருஷகாலம் இப்படித் தவறுதலாகச் சொல்லி வந்துவிட்டேனே' என்று மிக வும் அநுதபித்துத் திருத்திக் கொண்டார். ஆனாலும் இரண்டொருமாதம் கடந்த பிறகு அவர் பழையபடியே 'ஆயர்சிறுமயிரோ உமக்கு' என்றே சொல்லத் தொடங்கி விட்டார். அவ் விடத்தில் திருத்திக் கொண்டதாக ஞாபகங்கூட அவர்க்கு இல்லையாயிற்று.

மற்றொரு விவேகி உபதேச ரத்தினமாலையில் *முன்னோர் மொழிந்த பாசுரத்தில் "இது சுத்த உபதேச பரவார்த்தை யென்பர்" என்று ஸேவித்து வந்தார். ஒருநாள் அடியேன் அவ ரையழைத்து "ஐயோ! தேவரீர் இப்படி ஸேவிக்கலாமா? இதற்கு ஒரு அர்த்தமுமில்லையே, செய்யுளின்பத்திற்கும் பொருந்தாதே; 'இது சுத்தவுபதேச வரவாற்ற தென்பர்' என்ன வேணும்" என்று விஜ்ஞாபித்தேன். அவரும் மிகவுகந்து திருத்திக்கொண்டார். ஆயினும் ரூடமூலமான அநாதிவாஸனையை அவரும் வெல்ல முடியாமற் போயினர். இங்ஙனே பல.

அவிவேகிகளா யிருப்பவர்கள் வாயில்வந்தபடி ஸேவிக்கிறார்களென்பது வியக்கத் தக்கதேயன்று. நல்ல விவேகிகளா யிருப்பாருங்கூட "நமது வாயில் என்ன சொல் வருகிறது ? அதற்கு என்ன பொருள் ?" என்று சிறிதும் ஆராய்ச்சி செய்யாமலே யதேச்சமாக ஸேவித்து வருகிறார்களென்கிற துக்கம் அடியேனுக்கு அபரிமிதம். அடியேனுடைய பாபம் பிறர்வாயில்வரும் பிழைச் சொற்களே காதில்விழ ப்ராப்தமாகிறது. அவை கேட்டுப் பொறுத் திருக்குமியல்வுமில்லை பாவியேனுக்கு. ஆழ்வார்களின் ஈரச் சொற்களுக்கு இப்படியும் சில தண்டனைகள் ஏற்பட வேணுமா வென்கிற வருத்தம் நெஞ்சில் அபரிமிதமாக வுண்டாகிறது. தவறாகச் சொல்லுமவர்கள் ஆப்தர்களா? என்றுகூட ஆலோசியாமல் அவர்களோடு போராடவும் திருத்தங்களைத் தெரிவிக்கவும் நேர்ந்து விடுகிறது. குணக்ராஹிகளாயிருப்பவர்கள் விஷய வுண்மைகளைக் கேட்டு உகக்கிறார்கள் ; திருத்திக் கொள்ளவும் மனங்கொள்ளுகிறார்கள். 'இவன் சொல்லி நாம் கேட்பதா' என்றிருக்குமவர்கள் 'உன்னுடைய விச்வாமித்ர ஸ்ருஷ்டிகள் எம்மிடமும் விலைச் செல்லுமென நினைக்கிறாயோ' என்று வெறுத்துப் பேசுவர்கள். இவற்றால் அடியேனுக்கு லாப நஷ்டங்கள் யாது மில்லையாதலால் என்பணியை யான் ஆற்றிக் கொண்டே வருகிறேன்.

வடமொழி வேதத்திற்கு அதிகாரிகள் த்ரி மதஸ்தர்களுமாகையால் பூமண்டலத்தில் அந்த வேதத்தைப் பூர்த்தியாக ஓதினவர்கள் பல ஆயிரக் கணக்கில் தேறுவர்கள். தாம்ர பர்ணீதீரம், காவேரீதீரம், க்ருஷ்ணாதீரம், கோதாவரீ தீரம், கங்காதீரம் என்னும்படியான இடங்களில் ஸம்ஸ்க்ருத வேத பாரங்கதர்கள் எண்ணிறந்துள்ளார்கள். காசீ க்ஷேத்திர மொன்றில் மாத்திரம் ஆயிரக்கணக்கான வேதப்புலிகள் உள்ளார்கள். நாஸ்திகம் தலைவிரித் தாடு மிக்காலத்திலுங்கூட இந்நிலையுள்ளது. திவ்ய ப்ரபந்தத்திற்கு அதிகாரிகளோ மிகச் சிலரே. திருக்குறுங்குடி தொடங்கித் திருவேங்கட மலைக்குட்பட்ட விடங்களில் ஸ்ரீ வைஷ்ணவர்கள்மாத்திரமே திவ்ய ப்ரபந்தங்களுக்கதிகாரிகள். அன்னவர்களில் நாலாயிரமும் பூர்த்தியாக அதிகரித்தவர்கள் எத்தனை திருநாமங்கள் தேறுவர்களென்று கணக்கெடுத்தால் நூற்றுக் கணக்கில்தான் தேறும். திருவாய்மொழி மாத்திரம் தெரியும், நித்யாநுஸந்தானம் மாத்திரம் தெரியும், சில உபயுக்த ப்ரபந்தங்கள் தெரியும் என்பார் பலருளர். அவர்களை நீக்கி, நாலாயிரமும் பூர்த்தியாக அதிகரித்து அதை ஆதியோடந்தமாய் முகபாடமாகச் சொல்லவல்லவர்கள் எத்தனை ஸ்வாமிகளென்று ஆராய்ந்தால் 50, 60 திருநாமங்களாவது தேறுவர்களா என்பது ஸந்தேஹமே.

ஸம்ஸ்க்ருத வேதத்தில் ஸம்ஹிதை, பதம், க்ரமம், ஜடை, கனம், ப்ராஹ்மணம் என்று இத்தனை ஏற்பட்டிருக்கின்றன. இவற்றுக்குமேல் ப்ராதிசாக்யம், ஸப்தலக்ஷணம் முதலான லக்ஷணக்ரந்தங்களும் வர்ணக்ரமாதிசிக்ஷைகளும் பலபல ஏற்பட்டிருக்கின்றன. இவ்வளவிலும் பரிச்ரமப்பட்டுத் தேறுமவர்களைப் பெரும்பான்மையாகக் காண்கிறோம். திவ்யப்ரபந்தங்களுக்குப் பதக்ரமாதிகள் யாதொன்றுமில்லை. ஸம்ஹிதையின் ஸ்தானத்திலேயான மூலம் மாத்திரமே அதிகரிக்கவேண்டியதாக ஏற்பட்டிருக்கிறது. பதம் க்ரமம் ஜடை முதலியவற்றில் படவேண்டிய பரிச்ரமங்களை வியாக்கியானங்களில் படவேண்டியதாகப் பெரியோர்கள் திருவுள்ளம் பற்றியிருந்தார்கள். ஸ்ரீவசநபூஷணம் ஆசார்யஹ்ருதயம் முதலிய ரஹஸ்யங்களிலும் அவற்றின் வியாக்கியானங்களிலும் பரிச்ரமப்படுவதும் திவ்யப்ரபந்தங்களில் படவேண்டிய பரிச்ரமங்களுக்கு சேஷபூதம் என்றே பெரியார்கள் கொண்டிருந்தார்கள். இப்போது ரஹஸ்ய வ்யாக்கியானகாலக்ஷேபம் செய்வதென்கிற முறை ஆங்காங்கு அடியோடு லோபமடையாமல் சிறிது இருந்தாலும், ரஹஸ்ய மூலங்களைக் கண்டபாடமாகத் தரித்து ப்ரமேய

சிக்ஷைகளை நன்கு செய்து தேறியுள்ளவர்கள் தேடிப்பிடிக்கத் தக்கவர்களாகவேயுள்ளார்கள். இடையில் ப்ராஸங்கிகமான இவ்விஷயம் ஒருபுறமிருக்கட்டும்.

தமிழ்வேதமென்றும், வடமொழி வேதத்திற்காட்டிலும் மேம்பட்டதென்றும் நம் ஆசாரிய ஸார்வபௌமர்கள் பாராட்டின திவ்யப்ரபந்தங்களில் நாம் அச்ரத்தை காட்டலாகுமோ? எழுத்துக்களையும் சொற்களையும் மனம்போனபடியும் வாய்வந்தபடியும் சொல்லலாகுமோ? புத்தகங்கள் கண்ணுடிபோல் அச்சிடப்பட்டிருக்கின்றன. எழுத்துக்களை ஊன்றிப்பார்த்துப் பிழைபுகாவண்ணம் சிந்தனை செய்ய வேண்டாவோ? "எங்ஙனே சொல்லினும் இன்பம்பயக்குமே" என்று ஆழ்வார் அருளிச்செய்திருப்பதனுல் அபத்தமாகவோ ஸுபத்தமாகவோ எப்படிச் சொன்னாலும் இன்பமேயாகுமென்பதில் ஸந்தேஹமில்லை. ஆனாலும் அபத்தங்கள் புகாவண்ணம் காக்கவே வேண்டும். எம்பெருமான் வாத்ஸல்ய குணத்தினால் தோஷபோக்யன் ஆயினும் அது கொண்டு நாம் தோஷங்களை மனஸ்கரித்துச் செய்யலாகாதன்றோ.

இனி உச்சாரணவகையைப் பற்றிச் சில எழுதுகிறோம். கன்று, சென்று, சுற்றம், பெற்றம்......இவைபோன்ற சொற்களை வெறுந்தமிழர் உச்சரிக்கும் வகைபோல் அல்லாமல் தமிழ்வேதம் வல்லவர்கள்—கன்னு, சென்னு, சுத்தம் பெத்தம்......என்றிப்படி உச்சரித்து வருவது ஸகல திவ்யதேசங்களிலும் ஒரு நீராகக் காணும் விஷயம். திவ்யப்ரபந்தங்கள் ஈரச்சொற்களென்றும், செவிக்கினிய செஞ்சொற்களென்றும் வழங்கப்படுவதால் செவிக்குக் கடினமாக உச்சாரணம் கூடாது என்கிற திருவுள்ளத்தினாலேயே ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார்போல்வாரான பேராசிரியர்கள் இப்படி நியமித்தருள, இப்படியே உச்சாரண ஸம்பிரதாயம் அநாதிகாலமாக நிகழ்ந்து வருகிறது. இதுநிற்க. வடமொழியில் ப்லுதம் என்பது தமிழில் அளபெடை யெனப்படுகிறது. அதாவது மூன்று மாத்திரை. வேதத்தில் பலவிடங்களில் ப்லுதம் வரும். அங்கெல்லாம் அது தனிப்படத் தெரியும்படி நீட்டி நிறுத்தி ஓதுவர்கள். திவ்யப்பிரபந்தங்களிலும் அப்படியே பல விடங்களிலும் வருவதுண்டு. பெரியாழ்வார் திருமொழியில் (5-4-2.) "இறவு செய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்" என்றவிடத்து தீக்கொளீஇ என்பதில் ளீகாரத்தை மூன்று மாத்திரை நீட்டி நிறுத்திச் சொல்லவேணும். இப்படி ஓரிடமன்று; * தெளிதாகவுள்ளத்தைச் செந்நிறீஇ * (முதல் திருவந்தாதி 30) * செங்கெழுகூழை வரம்பொரீஇ * (பெரியதிருமொழி 3-5-3) * தோளிசேர் பின்னை பொருட்டெருதேழ் தழீஇ * (திருவாய்மொழி 4-2-5) * ஒண்சுடரடிப்போதொன்று விண்செலீஇ * வானவர் முறைமுறை வழிபட நிறீஇ * (திருவாசிரியம் 5.) என்றிப்படி பல விடங்களுண்டு. இவ்விடங்களில் ப்லுதமென்கிற விசேஷ மிருப்பதாக அறிந்துள்ளவர்கள் மிகச் சிலரேயாவர். அவ்விடங்களைச் சேவிக்கையில் கேட்கும்போது மிகவும் பரிதாபமாகவிருக்கும். நெடில்களை நீட்டுகிற அளவுகூட இல்லாமல் குறிலாகவே சேவிப்பர் பலர். இந்த யுகத்தில் திருந்தக் கூடியதாகத் தோன்றவில்லையிது. நீட்டவேண்டாத இடங்களில் நீட்டுவதோ அபரிமிதம். திருப்பாவையில் (ஏரார்ந்தகண்ணி) என்பதை (ஏரார்ந்தகண்ணீர்) என்று நீட்டி, கண்ணனைக் கண்டவுடனே யசோதைக்கு ஆனந்தக்கண்ணீர் பெருகிவிட்டதென்று இவர்களும் கண்ணீர் பெருக்கத் தொடங்கிவிடுவர்கள். திருவாய்மொழியில் *மாமணிவண்ணாவுன் செங்கமலவண்ண மென்மலரடி * என்றவிடத்து, பிரித்து நிறுத்துகையில் செங்கமலவண்ணா! என்று திருவாய்ப்பாடிவரையிலோ திருக்குருகூர்வரையிலோ நீட்டுவர் பலர். இப்படி அஸ்தானங்களில் நீட்டுகிறவர்கள் அளபெடை வருமிடங்களில் நீட்டவேணுமென்பதை அறியாமலேயிருந்துவருகிறார்கள்; சிக்ஷித்துத் தருவாருமில்லை. (தொடரும்)

